தென்று - மாதவகற்பம் - மாதவகற்பமென்னும் வைத்திய சாஸ்திரமானது-மன்னப்பயினும்-உறுதியாகச்சொல்லும்-எ-று.

பொ-ரை, சொல்லிய எண்ணெய்த் துளியானது மூத்திரத்துக்குள் அழுந்தி விடுமானால் கெடுதியானதென்று மாதவகற்பமென்னும் வைத்திய சாஸ்திரமானது உறுதியாகச் சொல்லும். (க௫)

இதுவுமது.

அம்புகட்கம்முசலஞ்சூலமொடுவா ள்
கும்பம்வெள்ளிலையெனக்குறிபடிற்றீ தே.

இ-ள், அம்பு - பாணம்-கட்கம் - வாளாயுதம் - முசலம்-இருப்புலக்கை-சூலம்-சூலாயுதம்-வாள்-ஈர்வாள்-கும்பம்-குடம் - வெள்ளிலை-வெற்றிலை-என-என்றுசொல்லுமிவைகள்போல - குறிபடில் - அடையாளந்தோற்றுமானால்-தீது- தீங்காகும்-எ-று.

பொ-ரை, பாணம் - வாளாயுதம் - இருப்புலக்கை- சூலாயுதம்-ஈர்வாள்-குடம் - வெற்றிலை - என இவைகள்போலக் குறிபொருந்தினால் அசாத்தியமாகும். (க௬)

இதுவுமது.

எருதறுகியாளமிபம்புலிமறிய ரி
நரனரவழுங்குபுண்ணரிமற்கடங்கர ம்
பூசைதேளிவற்றைப்போலுருத்தோற்றி ற்
பேசுவதென்னைப்பிணிதணியா வே.

இ-ள், எருது-இடபம்-அறுகு-சிங்கம் - இயாளம் - ஆளி-இபம்-யானை-புலி-வேங்கை-மறி-ஆடு-அரி-பன்றி-நரன்-மனிதன்-அரவு - சர்ப்பம்-அழுங்கு-ஆமை-புள்-பக்ஷி-நரி-நரி-மற்கடம்-குரங்கு-கரம்-கழுதை-பூசை-பூனை-தேள்-தேள்-இவற்றைப்போல் - இவைகளைப்போல-உரு - குறியானது-தோற்றில்-காணப்படுமானால்-பேசுவது என்னை - அதைக்குறித்துச் சொல்லவேண்டுவதென்னவிருக்கின்றது-பிணிதணியா-அந்த வியாதி சாத்தியமாகாது-எ-று.

பொ-ரை, எருது சிங்கம்-ஆளி-யானை-புலி-ஆடு-பன்றி-மனிதன்-பாம்பு-ஆமை-பக்ஷி-நரி-குரங்கு - கழுதை - தேள் - இவைகளைப்போல் குறியானது காணப்படுமானால், அந்தவியாதி சாத்தியமாகாது. (க௭)

சாத்தியாசாத்திய நெய்க்குறியிலக்கணம்.

சல்லடைக்கண்போற்றனித்தனித்துவாரமாய் ச்
சொல்லுமுனற்றிடிற்றொடலென்கரமென க்
கவுதமருரைப்பினுங்கபத்தாற்கண்படு ந்
தவியாவணங்கதுசாத்தியமென்ப ரே.

இ-ள், சல்லடைக்கண்போல்-சல்லடைக்கண்போல - தனித்தனி-வெவ்வேறே-துவாரமாய்-துவாரமுள்ளதாய்- சொல்லுமுன் - சொல்லுதற்குமுன்-அற்றிடில் - அற்றுப்போனால் - தொடலென்கரமென (பிணியாளனுடைய) கையைத் தொடவேண்டியதென்னென்று - கவுதமர் - கவுதமரிஷியானவர்-

4

உரைப்பினும் - சொல்லியிருக்கினும் - கபத்தால் - கபச்சேர்க்கையினால் கண்படும் - துவாரமுண்டாகும். (ஆதலால்) தவியா அணங்கது - கெடுதி யினையேசெய்யாத அந்தரோகமானது-சாத்தியம் என்பரே- சாத்தியமென்று நூலோர்சொல்லுவார்-எ-று.

பொ-ரை, சல்லடைக்கண்போல் வெவ்வேறாய்த் துவாரமுள்ளதாய் - துவாரம் விழுந்ததென்று சொல்லுதற்குமுன் அற்றுப்போனால் அந்தப்பிணி யாளன் கையைத் தொட வேண்டுவதில்லையென்று கௌதமரிஷி சொல்லி யிருந்தாலும், அது கபச்சேர்க்கையினா லுண்டாகின்றதாதலால் கெடுதி யினையே செய்யாது சாத்தியமென்று நூலோர் சொல்வர். (௧அ)

கருமசாந்தியின் பயன்.

கருமநோயிவையெலாங்கண்ணுதலளித்தரு ள்
கருமகாண்டக்கடன்கண்டவ்வவற் றை
யொழித்துயர்மருந்துணினும்பரைப்போல ச்
செழித்துநாற்பொருளுஞ்சேரவாழ்குவ ரே.

இ-ள், கருமநோயிவையெலாம் - இவ்வியாதிகளெல்லாம் பூர்வகருமங் களால் உண்டாகும் வியாதிகளாம்-(ஆதலால்) கண்ணுதல் - நெற்றிக்கண்ணை யுடைய பரமசிவன்-அளித்தருள்-அருளிச்செய்த-கருமகாண்டக்கடன்கண்டு- கருமகாண்டமென்னுஞ் சாத்திரத்தில் சொல்லப்படுகிற முறைமையை ஆராய்ந்துஅறிந்து - அவ்வவற்றை- அந்தந்தக்கருமங்களை - ஒழித்து- நீக்கி- உயர்மருந்து - உயர்வாகிய ஔஷதத்தை-உண்ணின் - கிரமமாக உண்டால்- உம்பரைப்போல-தேவர்களைப்போல-செழித்து-நரைதிரை மூப்புகளில்லாமல் செழுமையடைந்து-நாற்பொருளும்-அறம்-பொருள் - இன்பம்-வீடு-என்னும் நான்குபொருளும்-சேர-பொருந்த - வாழ்குவர் - வாழ்வார்கள்-எ-று.

பொ-ரை, இவ்வியாதிகளெல்லாம் - பூருவகருமங்களால் உண்டாகும் வியாதிகள் ஆதலால்,பரமசிவன் அருளிச்செய்த கருமகாண்டமென்கிற சாஸ் திரங்களிற் சொல்லுமுறையை ஆராய்ந்தறிந்து அந்தந்தக் கருமங்களை ஒழித்து கைபாகம் செய்பாகம் அமைந்த உயர்வான அவுஷதத்தை உண்டால் தேவர்களைப்போல் நரை திரை மூப்புகளில்லாமல் செழுமையுடையவர்களாய் அறமுதலிய பொருள்கள்சேர வாழ்வார்கள். (௧௯)

நெய்க்குறிச் சாஸ்திரம்.

முற்றியது.

ஆ சூத்திரம் - எஅ.

உ

கணபதிதுணை.

சிவசுப்பிரமணியர் துணை.

# பெயர் அகராதி.

பெயர் அகராதி

முற்றியது.

உ

கணபதி துணை.

சிவசுப்பிரமணியர் துணை.

# அரும்பதப்பொருளகராதி.

அ

அகடு - வயிறு
அகம் - உள்ளிடம் - ஆகாயம்
அகர்முகம் - உதயகாலம்
அங்கம் – பத்து
அங்கி - சடராக்கினி
அசம் - நெல்
அசலம் - அசையாநிலை
அசல் - கொசுகு
அசீதளம் – கருப்பூரம்
அசுவம் – அமுக்கிராங்கிழங்கு
அசை - சீரகம்
அசைப்பருங்கல் - மலை
அச்சடை – கீழ்வாய்நெல்லி
அச்சு - தேகம்
அஞ்சலி - நான்குபலம்
அடை - அப்பவருக்கம் - அடைகஷாயம் - [இலை
அடைக்காய் - தாம்பூலம்
அட்சம் - தான்றிக்காய் - வெங்காயம்
அஷ்டமிகை - அரைப்பலம்
அஷ்டி - அதிமதுரம்
அணங்கு – ரோகம்
அணிவேர் - குருவேர்
அணேக்கம் - மரம்
அண்டம் - விதை
அண்டர்நிலை - பொன்னாங்காணி
அண்ணம் - மேல்வாய்
அதகம் - சுக்கு
அதள் - பட்டை
அதிபலை - பேராமுட்டி
அதிரசம் - உப்பு
அதைப்பு – வீக்கம்
அத்தி - எலும்பு
அத்திதந்தம் - முள்ளங்கி
அபமார்க்கி - நாயுருவி
அபயலை - விலாமிச்சம்வேர்

அ

அப்பு – நீர்
அமலனிட்டமணி - உருத்திராக்கம்
அமிர்தமூடியவிடம் - சுக்கு
அமிர்தம் - பால்
அமிர்தை - நெல்லி - ரசாஞ்சனம் - வெள் [ளைப்பூண்டு
அமோகை - கடுக்காய்
அமை - மூங்கில்
அம்பஷ்டை - வட்டத்திருப்பி
அம்பினடி - திப்பலிமூலம்
அம்பு - திப்பலி - நீர்
அயம் - அரபொடி - ஆடு - நீர்
அயிர் - சருக்கரை - மணல்
அயிலேயம் - முசுமுசுக்கை
அயில் - இரும்பு
அரசம் - மூலரோகம்
அரணம் - கருஞ்சீரகம்
அரணி - தீக்கடைக்கோல்
அரத்தம் - அரக்கு - குங்குமப்பூ - சிவப்பு
அரம்பை - வாழை
அரவெனுந்துதி – கருமசாந்தி
அராவாரம் - தீராக்ஷிப்பழம்
அராளம் - இருவாக்ஷி - குங்கிலியம் - வெ [ள்ளைக்குங்கிலியம்
அரி - நிறம் - நெல் - புகை
அரிகாந்தி - விஷ்ணுகிராந்தி
அரிசனம் - மஞ்சள்
அரிட்டை - கடகரோகணி
அரியபச்சை - வங்காளப்பச்சை
அரியார்பவம் - பத்து
அரியுண்மூலம் - கோரைக்கிழங்கு
அருக்கு - எருக்கு
அருணம் - எலுமிச்சை
அருத்தம் - பாதி
அருப்பம் - நோய்
அரேணுகம் - காட்டுமிளகு

அ

அரைசிலை - அம்மி
அலகு - சலாக்கு
அல் - இருள்
அல்கல் - குறைதல் - தங்கல் - நாள்
அல்லிமூலகம் - அல்லிக்கிழங்கு
அவந்தி - காடித்தண்ணீர்
அவலம் — நோய்
அவி - சோறு - நெய்
அழற்காய் - மிளகு
அளர்க்கம் — தூதுளம்
அள் - காது
அறல் - சலம்
அனந்தம் - பொன்
அனந்தை - கொத்தான்கொடி
அனலம் - சித்திரமூலம்
அனல் - கொடிவேலி
அனற்கல் - சக்கிக்கல்
அனுக்கம் - செஞ்சந்தனக்கட்டை

ஆ

ஆ - பசு
ஆகமம் - இருபத்தெட்டு
ஆகளரசம் - அபின்
ஆகுலி - சிற்றரத்தை
ஆக்கல் - பாகம்
ஆசு - தூசி
ஆச்சாதநபலை - பருத்தி
ஆச்சியம் - நெய்
ஆஞ்சி - ஏலம்
ஆடகம் - சிறுநாகப்பூ-சொன்னம்
ஆடகி - துவரை
ஆடல் - செய்தல் - ஸ்நானஞ்செய்தல்
ஆதி - பரமசிவம் - வேர்
ஆதித்தர் - பன்னிரண்டு
ஆதிமருந்து - சுக்கு - மிளகு - திப்பலி
ஆநீர் - கோசலம்
ஆநெய் - பசுநெய்
ஆந்திரம் - குடல்
ஆபம் - சலம்
ஆமண்டம் - சிற்றாமணக்கு
ஆம் - சலம்
ஆம்பிரம் - ஒரு பலம்
ஆம்பிலம் - புளி
ஆம்பிலை - புளியாரை
ஆயத்தம் - யத்தனம்
ஆரகாளம் - காடிச்சலம்
ஆரம் - சந்தனம் - முத்து
ஆரல் - அக்கினி - பித்தம்

ஆ

ஆரவலர் - கட்டாத்திப்பூ
ஆரேவதம் - சரக்கொன்றை
ஆரை - நீராரை
ஆர்க்கு - எருக்கு
ஆர்த்திரகம் - இஞ்சி
ஆலம் - சலம்
ஆவி - புகை - புகையிலை
ஆழி - சக்கரம்
ஆற்றல் - சகித்தல் - தணித்தல்
ஆனந்தை - கொட்டைக்கரந்தை
ஆனனம் - முகம்
ஆன் - இடபவிராசி
ஆன்மா - இரண்டு
ஆன்மெழுக்கு - பசுஞ்சாணம்

இ

இங்கு - பெருங்காயம்
இங்குளம் - பெருங்காயம்
இசங்கு - சங்குப்பி
இசை - சங்கீதம்
இட்டிகை - செங்கல்
இணறு - பூ
இணை - இரண்டு
இதல் - கவுதாரி
இதழி - கொன்றை
இந்திரனார் - பொன்னாங்காணி
இந்திரவல்லி - முடக்கற்றான்
இந்திராணி - நொச்சில்
இந்திரியவம் - வெட்பாலை
இந்தீவரம் - கருநெய்தல்
இந்து - இந்துப்பு - எட்டி
இபமுகன்கரம் - ஐந்து
இமவாலுகை - பச்சைக்கருப்பூரம்
இயவானி - ஓமம்
இரசிதநாள் - சுக்கிரவாரம்
இரதி - பித்தளை
இரத்தம் - குங்குமப்பூ
இராசனை - வெள்ளைப்பூண்டு
இராத்திரி - மஞ்சள்
இராமடம் - பெருங்காயம்
இரிபேரம் - வெட்டிவேர்
இருசட் - பன்னிரண்டு
இருசுடர் - சந்திரர் - சூரியர்
இருதொண்டு - பதினெட்டு
இருந்தை - கரி
இருமை - இரண்டு
இருளிச்செவி - அமுக்கிராஞ்செடி
இலதை - கொடி - தக்கோலம்

இ

இலதைவன்னி - கொடிவேலி
இலவம் - லவங்கம்
இல்லம் - தேற்ருன்மரம்
இழுது - நெய்
இழைத்தல் - செய்தல்
இளந்தண்டு - முளைக்கீரை
இளம்பெண் - கற்ருழை
இறும்பு - மலை
இற்புலி - பூனை

ஈ

ஈங்கைத்துவக்கு - ஓர்மரப்பட்டை
ஈந்து - கற்சூர்
ஈயச்சுரதம் - இண்டஞ்சாறு

உ

உகிர் - நகம்
உக்கிரகந்தை - வசம்பு
உசிரம் - விலாமிச்சம்வேர்
உடசத்தோல் - குடசப்பாலைப்பட்டை
உடல் - உடம்பு - திரவியம்
உடுண்டுகம் - வாகைமரம்
உணக்கல் - உலர்த்தல்
உணத்தல் - உலர்த்தல்
உதகசுத்தி - தேற்ருன்கொட்டை
உதகமூலம் - தண்ணீர்விட்டான் கிழங்கு- [பச்சைவேர்
உதகம் - நீர்
உதாசனன் - அக்கினி
உதி - ஒதிமரம்
உத்தானம் - அடுப்பு
உந்தி - நதி
உபகுஞ்சிகை - கருஞ்சீரகம்
உபரசம் - நூற்றிருபத்தெண்சரக்கு
உபாயம் - நான்கு
உம்பரூர் - பொன்னுங்காணி
உரகவல்லி - வெற்றிலைக்கொடி
உரு - நிறம்
உருக்குதல் - கெடுக்குதல்
உருவின்காரணம் - பன்னிரண்டு
உருளரிசி - கொத்துமல்லி
உரூட்சை - வாழைக்கிழங்கு
உரூதி - ஆயில்பட்டை
உரை - பொன்
உலகமாதா - செம்மணித்தக்காளி
உலக்கை - மெருகன் கிழங்கு
உலோகம் - இரும்பு
உலோட்டம் - ஓடு
உழி - இடம்
உளை - உரோமம்
உளைக்கால் - உரோமக்கால்
உறை-மருந்து - வாழ்நாள்—வெண்கலம்

ஊ

ஊதியம் - பிரயோசனம்
ஊதை—வாதம்
ஊழ் - குணம் - பூர்வகன்மம்
ஊனி - அமுக்கிராங்கிழங்கு
ஊன் - மாமிசம்

எ

எஃகம் - ஆயுதப்பொது
எண் - இலக்கம் - எள் - நோயளவை [மருந்தளவை கூறும் ஒரு நூல்.
எண்கு - கரடி
எத்தல் - நறுங்குதல்
எந்திரம் - யந்திரம்
எரி - கந்தகம் - நெல்லிக்காய்கந்தகம்
எரிசுடர் - அக்கினி - விளக்கு
எரிமுகி - சேராங்கொட்டை
எருந்து - உரல்
எருவை - கோரைக்கிழங்கு
எல்லிமனை - தாமரை
எழுநா - அக்கினி

ஏ

ஏடகணி - ஓலையீர்க்கு
ஏணம் - நிலைபெறுதல் - மான்

ஐ

ஐ - சவ்வீரம் - சிலேஷ்மம்

ஒ

ஒலி - கோஷ்டம்

ஓ

ஓதனம் - உண்டி
ஓதிமத்தர் - பிரமர்
ஓமைக்கொட்டை - மாங்கொட்டை

ஔ

ஔதசியம் - பால்

க

கஃசு - கால்பலம்
கசிதம் - துடுப்பு
கச்சம் - கடகரோகணி - மரக்கால்
கக்ஷி - பறவைக்கூடு
கச்சோரம் - கிச்சிலிக்கிழங்கு
கச்சோலம் - சிச்சிலிக்கிழங்கு
கடகம் - கோட்டை
கடம் - பதக்கு என்னும் ஓரளவை - [பாண்டம் - மரமஞ்சள்

க

கடன் - மரக்கால்
கடாயம் - குடிநீர்
கடி - மணம்
கடுகி - சுண்டைச்செடி
கடுகை - கடகரோகணி
கடுக்கை - கொன்றைமரம்
கடுபத்திரம் - சுக்கு
கடுபி - வாலுழுவை
கணக்கன் - புதன்
கணம் - பதினெட்டென்னுமோரிலக்கம்
கணி - வேங்கைமரம்
கணை - திப்பலி
கண்டற்குயம் - தாழைமூலை
கண்டீரை - செவ்வியம்
கண்ணி - கொழுந்து
கதகம் - தேற்றான்மரம்
கதாகுவயம் - கோஷ்டம்
கதி - நடை
கந்தபுஷ்பி - மெருகன்கிழங்கு
கந்தம் - பாதரசம் - முருங்கை
கந்தவாகனடக்கி - வாதமடக்கி
கந்தினை - சிற்றரத்தை
கபவிரோதி - சிற்றரத்தை
கபித்தம் - கொட்டிக்கிழங்கு - விளா
கம் - சலம் - சிரசு
கம்பம் - நடுக்கம்
கரஞ்சம் - புங்கமரம்
கரணி - சஞ்சீவி
கரி - கரி - சாட்சி
கரீரம் - மூங்கிற்போத்து
கருங்கல் - சிகிமுகி
கருஞ்சாந்து - சேறு
கருமை - வெள்ளாடு
கரும்புறம் - பனை
கரும்பொன் - இரும்பு
கர்புரை - சாம்பிராணி
கலிகை - சீக்கராந்துள்
கல்லை - இலை
கவி - கான்கு
கவிர் - முள்முருக்கு
கழலடி - கழற்சிக்கொடிவேர்
கழுது - பிசாசம்
களமம் - நெல்
களிரினம்பு - யானைத்திப்பலி
களுசி - சீந்தில்
கறி - மிளகு
கறிக்காய் - மிளகு
கறை - உரல்
கறைபோக்கி - சவுக்காரம்
கற்கசம் - உத்தாமணி

கா

காகக்கரிப்பான் - கருங்கரசலாங்கண்ணி
காசமற்தகம் - பெரும்புல்
காஸ்மீரம் - குங்குமப்பூ
காணம் - செக்கு
காணி - பொன்னுங்காணி
காண்டம் - நீர்
காந்தாரி - சிவனார்வேம்பு
காம்பு - மூங்கில்
காய்ச்சுரை - புடத்திலிட்டெடுத்த தங்கம்
காரம் - அக்கிராகாரம்
காரி - கண்டங்கத்தரி - தூணி என்னும் ஓரளவை
காலி - பூனைக்காலி
கால் - மரக்கால் - வாதம்
காவல் - மதில்
காவி - கருங்குவளை
காழ் - வயிரம்
காற்புத்தி - தாளகம்

கி

கிசலம் - தளிர்
கிஞ்சுகி - பலாசம்
கிடி - பன்றி
கிரீஷ்மசுந்தரி - சிறுசெருப்படை
கிருமியரி - வாய்விளங்கம்
கிழி - பொட்டணி
கிளவி - சொல்

கீ

கீடப்பகை - வாய்விளங்கம்
கீடம் - புழு
கீதி - கருங்காலி
கீலம் - பிசின்

கு

குசம் - நீர்
குடசம் - வெட்பாலை
குடபலை - மணத்தக்காளி
குடம் - சதுரக்கள்ளி
குடிஞை - நதி
குடிநீர் - கஷாயம்
குடிலை - பிரணவம்
குடுப்பம் - நான்குபலம்
குஷ்டம் - கோஷ்டம்
குண்டலி - சீந்தில்
குதுகுலம் - மகிழ்ச்சி

கு

குந்தனை - தைலபாத்திரம் வைக்குங்கருவி.
குந்தம் - நான்குபலம்
குபேரிகை - வட்டத்திருப்பி
குமரி - கற்றாழை
குமிகை - எள்ளு
குமிழ்ப்பு - கொழித்தல்
குமுதம் - அடுப்பு
குயவரி - புலி
குயித்தல் - செய்தல்
குயில் - சொல்
குய் - சாம்பிராணி - புகை
குருக்கண் - முலை
குலாதினி - கடகரோகணி
குவாதம் - கஷாயம்
குழந்தைநீர் - இளநீர்
குழை - சேறு
குளகம் - மரக்கால்
குளிர் - கடகவிராசி
குறடு - திண்ணை
குன்றிவேர் - அதிமதுரம்

கூ

கூரம் - பாகல்
கூழ் - தங்கம்-பொன்

கே

கேரளம் - வாய்விளங்கம்

கை

கையான் — கரசலாங்கண்ணி

கொ

கொச்சை - வெள்ளாடு
கொடி - காக்கை
கொடித்தீ - சித்திரமூலம்
கொழு - காறு
கொழுக்கட்டைமரம் - மோதகவல்லிமரம்

கோ

கோ - சாறு - நீர்
கோகனம் - கரசலாங்கண்ணி
கோசவதி - பீர்க்கு
கோணி - இருதூணி என்னும் ஒரளவை
கோதிகை - உடும்பு
கோபி - நன்னாரி
கோமயம் - சாணம்
கோரகை - அகப்பை
கோரண்டம் - செம்முள்ளி
கோவிட்டு - சாணம்
கோளி - ஆலமரம்

ச

சகுனம் - கிழங்கு
சக்கரம் - பதக்கு என்னும் ஒரளவை - [பூமி
சக்கராங்கி - கடகரோகணி
சக்கிரி - குயவன்
சங்கீதம் - கிச்சிலிக்கிழங்கு
சசி - இந்துப்பு - கருப்பூரம் - பச்சைக் [கருப்பூரம்.
சடக்கடை - ஒன்பது
சடிலை - சடாமாஞ்சில்
சடை - சடாமாஞ்சில் - வேர்
சதமூலை - தண்ணீர்விட்டான்கிழங்கு
சதாபலம் - எலுமிச்சை
சதாபுட்பி - எருக்கு
சதுக்கம் - திண்ணை
சதுர்ப்பலம் - நான்குபலம்
சத்தி - நெல்லிக்காய்கந்தகம் - மூன்று
சத்து - கற்பூரசிலாசத்து - சாரம் - மாவு
சந்தி - கீல்
சமை - வருடம்
சம்பம் — எலுமிச்சை
சயந்தி - கருஞ்செம்பை
சயபாளம் — நேர்வாளம்
சயா - கடுக்காய்
சரஷபம் - கடுகு
சரணம் - பெருங்காயம்
சரண் - அம்மையார்கூந்தல்
சரதம் - உண்மை
சரம் - ஐந்து - திப்பலி
சருமபந்தம் - மிளகு
ஜலம் - வெட்டிவேர்
சவிகை - செவ்வியம்
சவியம் - செவ்வியம்
சளி - பிசின்

சா

சாகம் - சிறுகீரை
சாதி - சாதிக்காய் - தேக்குமரம் - புழுகு [சட்டம்
சாதிசம் - சாதிக்காய்
சாம்பு - நாவல்மரம்
சாய் - கோரைக்கிழங்கு
சாரிபை - நன்னாரி
சார்த்தூலம் - புலி
சாலம் - கூட்டம்
சாலவிருட்சம் - ஆடாதோடை
சாலி - புழுகுசட்டம்

சா

சாவினி - பேய்ப்பீர்க்கு
சாளம் - சன்னல்

சி

சிகரம் - லவங்கம்
சிகி - அக்கினி-மயில்
சிகிப்பீலி - மயிலிறகு
சிக்குவை - தண்ணீர்விட்டான்கிழங்கு
சிங்கவல்லி - தூதுளை
சிங்கி - கற்கடகசிங்கி
சிஞ்சைவித்துரி - புளியங்கொட்டைத் [தோல்
சிதமை - வெள்ளாடு
சிதம் - வெண்மை
சித்தகம் - மெழுகு
சித்திரகம் - கொடிவேலி
சித்திரவிதை - முத்துக்கொட்டை
சிநேகபலம் - எள்ளு
சிம்மமுகி - ஆடாதோடை
சிரிதம் - கஷாயம்
சிரை - நரம்பு
சில்லி - அறுகீரை
சில்லியடை - சல்லடை
சிவிறி - விசிறி
சிவை - நெல்லிக்காய்

சீ

சீதம் - பற்பாடம்
சீவந்தி - வெட்பாலை
சீவனி - வெட்பாலை
சீவனியம் - நீர்
சீனப்பட்டை - பறங்கிபட்டை

சு

சுகபலை - எருக்கு
சுசாதிபலம் - சாதிக்காய்
சுசி - கொடிவேலி - பாதரசம்
சுடர் - சூரியன் - விளக்கு
சுத்தி - அரைப்பலம் - கும்பிடுகிளிஞ்சில்
சுநுகி - சதுரக்கள்ளி
சுந்தரி - சிறுசெறுப்படை
சுப்பிரதவ்டம் - அத்திமரம்
சுரசம் - நொச்சில்
சுரதை - சிற்றரத்தை
சுராலை - சாம்பிராணி
சுரிகை - கத்தி
சுரேசுவரி - முசுமுசுக்கை
சுல்லி - அடுப்பு
சுவச்சம் - எண்ணெய்
சுவல்லி - கார்போகிவிதை

சு

சுவாது - ஆடாதோடை
சுள்ளை - சூளை
சுனகன் - நிருதிமூலை

சூ

சூக்குமம் - அற்பம்
சூடாலம் - சணப்புவிதை
சூர்ப்பம் - தூணி என்னும் ஓரளவை
சூலினி - வெற்றிலை

செ

செந்நீர் - இரத்தம்
செய் - சிவப்பு
செருக்கு - ஆங்காரம்

சே

சேகு - மரவயிரம்
சேணுவணன் - ஆகாசக்கருடன்கிழங்கு
சேர்வை - சேர்க்குதல் - கலத்தல்

சை

சைரியம் - பெருங்குறிஞ்சி

சொ

சொனகு - பெரும்புல்

சோ

சோகி - பலகரை
சோசக்காய் - தேங்காய்
சோடி - சீக்கிராந்தூள்
சோபாலிகை - அடுப்பு

த

தகடு - கம்மாறுவெற்றிலை
தகை - அழகு
தக்காரி - தழுதாழை
தடி - உடம்பு
தட்டல் - நருக்குதல்
தத்துவயம் - குருணி என்னும் ஓரளவை
தந்தசடம் - எலுமிச்சை
தந்தி - கம்பி - நரம்பு
தந்திகர்ணி - மெருகன்கிழங்கு
தந்திபீசம் - நேர்வாளம்
தந்திரிகை - கம்பி
தந்து - நூல்
தபனற்கஞ்சி - மஞ்சள்
தபனன் - அக்கினி - சூரியன்
தமர் - துவாரம்
தமாலகி - கீழ்வாய்நெல்லி
தரணி - சூரியன்
தரு - தேவதாரம்
தருணநாரி - சிறுநன்னாரி
தலகுபகத்தாதி - ஆமணக்குவேர்

த

தவழ்புனல் - ஆற்றுச்சலம்
தளவம் - முல்லை
தற்பம் - கஸ்தூரி
தன்மூலம் - திப்பலிக்கட்டை
தன்னியம் - முலைப்பால்

தா

தாத்திரி - நெல்லி - பூமி
தாரம் - தேவதாரம்
தாரு - தேவதாரு
தாவம் - காடு - காட்டுத்தீ
தானிகை - கொத்துமல்லி

தி

திகை - திசை
திங்கள் - பன்னிரண்டு
திதித்தவில் - கட்டியவீடு
தித்தகோசாதகி - பேய்ப்பீர்க்கு
தித்தம் - கசப்பு
திரவம் - திராவகம்
திரவியம் - சரக்கு - பொன்
திரிகண்டகி - நெருஞ்சில்
திரியக்கு - குறுக்கு
திரியக்ஷி - தேங்காய்
திருகுபலை - வலம்புரிக்காய்
திலரசம் - எள் எண்ணெய்
திலபவம் - எண்ணெய்
தில்லகம் - வெள்ளிலோத்திரம்
தில்லியம் - நல்லெண்ணெய்
திவாகரன் - சூரியன்
திவிபிநாமம் - கொடிவேலி
திறம் - அரை யென்னும் ஓரிலக்கம்

தீ

தீ - கொடுமை-ஜடராக்கினி
தீக்ஷணம் - மிளகு
தீர்க்ககந்தை - மெருகன்கிழங்கு
தீர்க்கபற்ணி - வாழை
தீர்ப்பான் - வைத்தியன்

து

துண்டம் - நாசி
துகியரிசி - அட்சதை
துப்பு - அரக்கு - வன்மை
தும்பி - தும்பிமரம்
துருமவியாதி - கொம்பரக்கு
துரோணம் - பதக்கு என்னும் ஓரளவை
துலை - நூறுபலம்
துல்லியம் - அப்பிரகம்
துவம் - இரண்டு
துவர் - சிவப்பு
துவர்ப்பு - பத்து
துவாலை — பூச்சு
துவிதியை - கோரோஜனம்
துறை - நதி

தூ

தூத்திரக்கூர்ச்சம் - ஆண்தருப்பை
தூமம்போக்கி - புகைக்கூடு
தூராகு - எலிச்செவிக்கள்ளி
தூரு - அடி
தூர்வை - அறுகு
தூவி - மயிலிறகு

தெ

தெய்வம் - வருடம்

தே

தேகராசம் - கரிசாலை
தேசனி - மஞ்சள்
தேவதூபம் - வெள்ளைக்குங்கிலியம்
தேறு - தேற்றான்மரம்

தை

தை - தைக்கத்தக்கவை
தைலம் - எள் எண்ணெய்
தைவதம் - தெய்வம்

தொ

தொக்கு - சருமம் - பட்டை
தொட்டி - குறுந்தொட்டி
தொண்டி - கலப்பைக்கிழங்கு
தொள்ளை - மரக்கால்

தோ

தோகம் - சிறுமை
தோகை - வால்
தோகைமுகபூடணம் - மஞ்சள்
தோணி - சிறுவழுதுணை
தோயபாணம் - பொடுதலை
தோயம் - நீர்
தோற்பை - புரையுள்ளதோற்குல்லா

ந

நகம் - நாகணம் - பூமி
நகுலம் - கீரி
நசை - இச்சை
நதம் - கிரந்திதகரம்
நதிகாந்தை - திப்பலிமூலம்
நமைக்காய் - கத்தரிக்காய்
நரை - வெண்மை
நளி - வெண்சாரணை
நறுக்குமூலம் - திப்பலிக்கட்டை

ந

நறுஞ்சுதை - நல்லபசும்பால்
நனைவிற்கூ - ஒதமறுபூமி

நா

நாகபலை - நாகமல்லி
நாகரம் - சுக்கு
நாகவல்லி - வெற்றிலை
நாகு - புற்று
நாடி - நாசி
நாதேயம் - நீலாஞ்சனம்
நாபி - கஸ்தூரி
நாரம் - நாரத்தை
நாராயணி - தண்ணீர்விட்டான்கிழங்கு
நாரி - நன்னாரி
நார் - கல்நார்
நார்ச்சிலை - வலைக்கோணி
நாளாய்ந்தோர் - வைத்தியர்

நி

[illegible] - மஞ்சள்
[illegible]ம் - வராகனிடை
[illegible] - ஏலம்
[illegible]பவம் - அவரை
[illegible]சம் - பிசின்
நி[illegible]
நிர்த்[illegible] - கஷாயம்
நிவேசனம் - இடம்

நீ

நீஞளம் - உயர்ந்தபுகைக்குழை
நீர்க்கண்டகி - நீர்முள்ளி
நீர்ச்சித்திரம் - நீரடிமுத்து
நீர்வல்லி - வெற்றிலைக்கொடி
நீல் - வாதம்

நு

நுசை - சிவதைவேர்
நுணல் - தவளை
நுழை - துவாரம்

நெ

நெய்யரி - பன்னாடை
நெறி - வழி

நே

நேயம் - எண்ணெய் - நெய்
நேர் - மேல்

நோ

நோய்முகன் - சனி
நோற்றல் - தவஞ்செய்தல்

ப

பகடு - யானை
பகம் - காக்கட்டான்கொடி
பகல் - சூரியன்
பக்கம் - பதினைந்துநாள்
பங்கி - கஞ்சா
பங்கிவித்து - கஞ்சாவிதை
பங்குரை - அதிவிடயம்
படகம் - தம்பட்டம்
படங்கு - பதங்கம்
படர் - துன்பம்
படு - உப்பு
படோல் - பேய்ப்புடல்
பட்டம் - சீலை
பட்டி - ஓர்விதச்சிகிச்சை - வாலை என்னும் [ஓர்கருவி
பணிக்கணம் - சர்ப்பக்கூட்டம்
பணை - உயரம்
பண்டிதவாய் - கடுக்காய்
பதப்பலம் - கால்பலம்
பதம் - சோறு - நாழிகை
பதரி - இலந்தை
பதி - பூமி
பதிமினுக்கி - விளக்குமாறு
பதுமை - ஒரிதழ்த்தாமரை
பத்தசாரம் - காடிச்சலம்
பத்ததி - ஒழுங்கு
பத்திரதாருகம் - தேவதாரம்
பத்திரபதி - சிற்றுமுட்டி
பத்தூரம் - பொன்னுங்காணி
பயசு - பால் - நீர்
பயம் - நீர்
பரணி - அடுப்பு
பரநாமத்திலை - மாவுலிங்கிலை
பராகம் — தூள்
பரி - கருமை-பருத்தி
பரிக்கந்தி - அமுக்கிராங்கிழங்கு
பருஞ்சாய் - சடாமாஞ்சில்
பருந்தந்திரட்டு - ஒட்டு
பறைநாதம் - நெல்லிக்காய்கந்தி
பலகணி - சாளரவாயில்—திட்டிவாயில்
பலண்டு - வெங்காயம்
பலம் - வெட்பாலை
பலார்த்தம் - அரைப்பலம்
பலினி - மிளகு
பலோத்தமை - திராக்ஷிப்பழம்
பல்லம் - கரடி
பல்லவம் - தளிர்

ப

பவனம் - இடம் - வாயு
பவித்திராங்குலி-தருப்பைமுடிச்சணிவிரல்
பறழ் - பருப்பு
பற்ணி - வல்லாரை
பற்ணை - தண்ணீர்விட்டான்கிழங்கு
பற்பணம் - ஓர்பலம்
பற்றகற்றி - பாத்திரஞ்சுறண்டுங்கருவி
பன்னம் - இலை - பத்திரி

பா

பாக்கியம் - கஷாயம்
பாசகுசுமம் - லவங்கம்
பாசனம் - பாண்டம்- பாத்திரம்
பாடீரம் - சந்தனம்
பாடை - வட்டத்திருப்பி
பாணம் - திப்பலி
பாதலத்தம்பி - நிலக்காளான்
பாதுகை - சிறுசெருப்படை
பாமை - சிரங்கு
பாம்புக்கண்ணி - சங்கங்குப்பி
பாரதம் - பாதரசம்
பாரிபாவியம் - கோஷ்டம்
பாறை - இருப்புலக்கை-கடைப்பாரை
பாலகம் - எள்ளு
பாவகன் - அக்கினி
பாளிதம் - சந்தனம்
பாறல் - நீங்கல்
பாற்கரியோன் - தேவேந்திரன்
பானாள் - பாதிநாள்

பி

பிசம் - தாமரைவளையம்
பிசுகம் - உத்தாமணி
பிடக்கு - வைத்தியன்
பிடிச்சீலை - பிடித்துணி
பிட்டம் - மாவு
பித்திகை - சுவர்
பிம்பி - கோவை
பிரகுஞ்சம் - ஒருபலம்
பிரசை - மெருகன்கிழங்கு
பிலாளகம் - புழுகுசட்டம்

பீ

பீதி - பயம்
பீருதந்தி - தண்ணீர்விட்டான்கிழங்கு

பு

புட்கரம - கோஷ்டம்
புட்பேந்திரம் - சண்பகம்
புத்தாடை - புதியவஸ்திரம்
புராணி - பட்டை
புரியணை - பிரிமணை
புருணம் - கருப்பத்திலிருக்கின்றசிசு
புலமினுக்கி - விளக்குமாறு
புலி - வேங்கைமரம்
புல்மரம் - தென்னமரம்
புவனம் - சலம்
புவிப்பாத்திரம் - மண்கலம்
புற்பதி - வாழைக்கிழங்கு
புனிறு - ஆருசம்
புன்குரி - புங்கம்பட்டை

பூ

பூ - பூநீறுக்கு முன்பு தோன்றுங்கதிர்
பூதக்குயம் - ஆலம்விழுது
பூதநாசினி - பெருங்காயம்
பூதம் - சடாமாஞ்சில்
பூதவக்குருக்கண் - ஆலம்விழுது
பூதிகம் - ஆயில்மரம்
பூரம் - ரசகருப்பூரம்-கருப்பூரம்
பூருது - பூநீறு
பூருவம் - முதிர்ச்சி
பூலதை - பூநாகம்
பூலாசம் - புல்லாந்தி
பூல் - புல்லாந்தி
பூவள்ளம் - தங்கக்கிண்ணம் - மண்கிண்ணம்
பூழில் - அகிற்கட்டை

பெ

பெண் - கற்றாழை

பே

பேய்க்கனி - பேயன்வாழைப்பழம்
பேருயிர் - பெருங்காற்று
பேருரியோர் - சக்கிலியர்
பேறு - ஒன்று

பை

பைசாசி - சடாமாஞ்சில்
பையோடதி - பச்சைக்கொடி

பொ

பொடி - பஸ்மம்-சூரணம்
பொற்றேகராசம் - பொற்றலைக்கரிப்பான்
பொன்றுவல்லி - சீந்திற்கொடி

போ

போகி - கார்போகிவிதை
போழல் - பிளக்குதல்
போனகம் - சோறு

ம

மகக்குழை - மாவிலை
மகம் - இருபத்தொன்று
மகாபிலை - வில்வம்
மங்கல்லியம் - தயிர்
மங்கை - கற்றாழை
மச்சிகை - மோர்
மடக்கு - பேரகல்
மடி - தாழைவிழுது
மட்டிலை - பச்சிலை
மணவை - அடுப்பு
மணிப்பவம் - இருபது
மணிப்புன்கு - பொன்னாங்காய்
மண்டலம் - நாற்பத்தெட்டுநாள்-பூமி
மண்ணரசு - பூவரசுமரம்
மதகரிக்கணை - யானைத்திப்பலி
மதப்பூ - மராட்டிமொக்கு
மதம் - கன்மதம்
மதலை - சரக்கொன்றை
மதி - மாதம்
மதிக்கலை - பதினாறு
மதில் - இஞ்சி
மதிவல்லி - கொத்தான்கொடி
மதுகரம் - எட்டி - வச்சநாபி-வண்டு
மதுஸ்மிகி - பறங்கிச்சக்கை
மதுபர்ணிகை - சீந்தில்
மதுரசை - பெருங்குரும்பை
மதூகவலர் - இலுப்பைப்பூ
மதூச்சிட்டம் - மெழுகு
மத்தம் - ஊமத்தை
மஸ்த்து - தயிர்ச்சலம்
மந்திரம் - வீடு
மயிலை - வெட்சி
மயூரம் - குரோசானி - நாயுருவி
மரவிடம் - தாவரவிஷம்
மரீசம் - மிளகு
மருது - மருதமரம்
மருந்து - அமிர்தம்
மரைப்பூ - தாமரைப்பூ
மலயசம் - சந்தனம்
மலையாளி - மிளகு
மல்லை - கைப்பனை - கப்பரை
மறவன் - சிலேஷ்மம்
மறுவி - கஸ்தூரி

மா

மாகாளி-களாவிழுது - மாவலிக்கிழங்கு
மாகாளிசரண் - களாவிழுது
மாக்கடு - சூரத்துக்கடுக்காய்

மா

மாடம் - உழுந்து
மாதிரி - அதிவிடயம்
மாதுலங்கம் - கொடிமாதுளை
மாதுவசை - பெண்வசம்பு
மாந்தல் - உண்ணல்
மாமிசி - சடாமாஞ்சில்
மாமுகன்கை - ஐந்து
மாயாளி - வட்டத்திருப்பி
மார்க்கவம் - கரிசாலை
மாலரும்பு - மராட்டிமொக்கு
மாலூரம் - வில்வம்
மாற்கரியோனுதல் விழிப்பால் - அக்கினி
[மூலை
மானம் - ஒருவிதப்பொருத்தம்

மி

மிசி - தாளிசபத்திரி - சதகுப்பை
மிச்சில் - கரி
மிச்சை - விலாமிச்சை
மிரியல் - மிளகு
மிருகமதம் - கஸ்தூரி
மிருகாண்டசம் - கஸ்தூரி
மிருநாளம் - விலாமிச்சு
மிலேச்சம் - செம்பு
மிழற்றல் - சொல்லுதல்
மிறை - குற்றம்

மீ

மீது - மேல்
மீனாக்ஷி - பொன்னாங்காணி

மு

முகரி - தாழை
முகுரம் - கண்ணாடி
முகுளம்-தாமரைவளையம்
முக்கண் - மூன்றுவிரலினகக்கண்
முக்கண்டகி - நெரிஞ்சில்
முக்காரி - கலம் என்னும் ஓரளவை
முக்காலி - அக்கினி
முசரு - தயிர்
முசலி - தாழை - மெருகன்கிழங்கு
முடங்கன்மூலை - தாழைவிழுது
முட்டி - எட்டி - ஒருபலம்
முண்டனி - கொட்டாங்கரந்தை
முதிரை - கொள்ளு
முத்தம் - முத்துக்கொட்டை
முஸ்தை - கோரைக்கிழங்கு
முப்பழம் - திரிபலை
முப்பிணி - வாத பித்த சிலேஷ்மம்

மு

மும்மூர்த்தி - திரிகடு
மும்மை - மூன்று
முயிறு - முசிறு
முருக்கு - எலுமிச்சை
முளரிநாளம் - தாமரைவளையம்
முற்கம் - பச்சைப்பயறு
முனி - அகத்தி

மூ

மூடம் - எட்டுமரக்கால் கொண்ட ஒரளவை
மூரல் - பல்
மூரி - எருமை
மூர்த்தம் - சிரசு
மூவட்சித்தொக்கு - தேங்காய்நார்
மூழி - அகப்பை

மெ

மெய் - உடம்பு

மே

மேகநாதம் - சிறுகீரை
மேடக்கோடு - ஆட்டுக்கோட்டுப்பாலை
மேதி - வெந்தயம்
மேத்தியம் - சீரகம்
மேற்புலவர் - தேவர்
மேனி - குப்பைமேனி
மேனுடு - பொன்னுங்காணி

மை

மை - கருமை - வெள்ளாடு
மைச்சாலி - கருங்குருவைநெல்
மையுடை - கருவேல்

மோ

மோகி - கஞ்சா
மோக்கல் - மொள்ளல்
மோசை - இலவமரம்
மோடு - வயிறு
மோதல் - இடித்தல்
மோரடம் - வீழி

ய

யவசி - கழுதைப்பாலை

யா

யாடம் - சிறுகாஞ்சொறி
யாழ் - மீனவிராசி

யு

யுகம் - இரண்டு

யோ

யோசனவல்லி - மஞ்திட்டிவேர்

ர

ரசோனம் - வெள்ளைப்பூண்டு

ரா

ராசி - பன்னிரண்டு

ரு

ருசு - நேர் - அத்தாட்சி

ரூ

ரூமாலம் - மாவிலிங்கு

ரோ

ரோசகம் - நேர்வாளம்

ல

லொத்துகத்தோல் - வெள்ளலத்திப்பட்டை

வ

வங்கம் - சிறுகத்தரி - வெள்ளி
வங்கூழ் - வாதம்
வசந்தமலர் - லவங்கம்
வசுதை - தேசம்
வச்சகத்தண்டுலம் - வெட்பாலையரிசி
வச்சலமணி - கோரோசனம்
வடவை - எருமை
வடு - குற்றம்
வடுகன் - வைரவன்
வரணம் - மாவிலிங்கு
வராககற்ணி - அசுவகந்தி
வராகி - நிலப்பனை
வராலம் - லவங்கம்
வரிவரி - தண்ணீர்விட்டான்கிழங்கு
வருஷபுட்பம் - தாழம்பூ
வர்த்தமானம் - சிற்றாமணக்கு
வலயம் - வளையம்
வல்கம் - பட்டை
வல்லிசம் - மிளகு
வல்லியை - அமுக்கிராங்கிழங்கு
வல்லிவன்னி - சித்திரமூலம்
வழி - பழமை
வள்ளடி - செவிமூலம்
வள்ளியம் - மெழுகு
வற்காலி - வெள்ளாடு
வனம் - துளசி - நீர்

வா

வாதநாசனம் - ஆமணக்கு
வாத்து - வாஸ்துபுருஷன்
வாயசி - செம்மணத்தக்காளி
வாருகம் - ஆற்றுத்தும்மட்டி
வாருணி - ஆட்டாங்கொடி
வார் - நீர்

வா

வாலரியுரி - கிளியூறற்பட்டை
வாலுகம் - மணல்
வானகம் - வெட்டிவேர்
வானநாடு - பொன்னுங்காணி
வான்மீகம் - குங்குமப்பூ

வி

விகலை - காலம்
விடமரக்கனி - எட்டிப்பழம்
விஷானி - சதுரக்கள்ளி
விடைக்கந்தம் - செம்மணத்தக்காளி
விபுதர்கந்தம் - நெய்ச்சட்டி
வியாக்கிரி - கண்டங்கத்தரி
விரிகி - நெல்
விருகம் - செந்நாய்
விருந்தம் காமபு
விழால் - விழாலரிசி
விளவு - விளா
வினை - இரண்டு

வீ

வீடு - ஒன்று
வீரணி - விலாமிச்சை
வீரை - வட்டத்திருப்பி

வெ

வெகுபுத்திரி - கீழ்வாய்நெல்லி - துளசி
வெங்கலம் - சுடுகையுள்ளபாத்திரம்
வெடி - புகை
வெள்ளிநகம் - கைலாசம்
வெள்ளை - வெள்ளாடு
வெறிக்கடுக்காய் - பேய்க்கடுக்காய்
வெறியேறி - அக்கினி
வெற்பிரதம் கருப்பூரசிலாசத்து

வே

வேசரி - கழுதை
வேணி - வசம்பு
வேத்திரச்சாய் - பிரப்பங்கோரை
வேத்திரத்தாள் - பிரப்பங்கிழங்கு
வேய் - மூங்கில்
வேர் - திப்பலிமூலம்
வேர்க்கொம்பு - சுக்கு

வை

வை - வைக்கோல்
வைகறை - விடியற்காலம்
வைதேகி - திப்பலி

---

சிவசுப்பிரமணியர்துணை.

# அரும்பதப்பொருளகராதி

முற்றியது.

---

உ

சிவமயம்.

உரையாசிரியராகிய காஞ்சீபுரம் வித்துவான்

# சபாபதிமுதலியாரவர்கள் இயற்றிய

## சிறப்புப் பாயிரம்.

நேரிசை ஆசிரியப்பா.

கங்கையுமறுகுங் கடுக்கையுமணிந் து
சிங்கியைத்தனது திருமிடற்றடக் கி
மூவரிலொருவனுய் நின்றமுதல்வனை த்
தேவதேவனைத் திருவடிபணிந் து
பச்சிலையெவையும் பறித்திட்டானெ ய்
நச்சியாட்டி நாடொறும்பரவும் ம்
அடியார்க்கருளும் ஐம்முகக்கடவு ளை
முடியாச்செல்வம் மொய்த்துறுவள்ளலை த்
தம்முடையுள்ளமாந் தனிப்பெருங்கோயிலி ற்
செம்மையினிறுவிய தேரையமுனிவ ர்
ஆயுள்வேதமாம் அளப்பருங்கட லை
மேயதம்மறிவாம் வியன்பெருமந்த ர
மலையாற்கடைந்து வகைபெறத்திரட்டி த்
தொலையாதுயிர்கள் சுகம்பெறத்தந் த
மன்னியதைல வருக்கச்சுருக்கமா ம்
இன்னமுதத்தை யாவருந்தேர்ந்துண ச்
சொற்றெறுஞ்சொற்றெறுந் தொகுபொருள்விளங்க க்
கற்றுணர்முதியருங் காதலின்மகிழ ப்
பொலிவுடனியற்றிப் பொற்புறும் அச்சி ல்
நலியாவகையி னுடிப்பதித்தன ன்
பொருந்தியபுகழ்சேர் புலியூர்தன்னி ல்
வருந்தலில்கற்றல வரிசைசெய் த
முத்தையஞானி முதுபெருந்தவத்தா ல்
இத்தலத்தெவரு மின்புறத்தோன் றி

ஆயுள்வேத மனைத்தையுமுணர்ந் து
மேயவுலகில் விளங்கும்பிர்க ளீ
பற்றுறுபிணியாம் பாயிருள்தன்னை ச்
செற்றிடுந்தினகர னென்னுஞ்சீர்த்திய ன்
செந்தமிழுணர்ந்த செந்நாப்புலவ ன்
பந்தமாம்பதார்த்த குணசிந்தாம ணி
தனக்குப்பொழிப்புரை தகவுடனியற்றியோ ன்
திருந்தியசீவ ரக்ஷாமிருத ம்
அருந்தமிழ்வாக்கிய மாகச்செய்தோ ன்
பழநித்தண்ட பாணிக்கன்ப ன்
மழுவேறுகைக்கும் வரனடியார்க்கு த்
தக்கவன்பன் சைவசாதன மே
மிக்கபொருளென வியப்புடனணிவோ ன்
ஆயுள்வேத பாஸ்கரனெமன ப்
பாயுநீருலகிற் பரவும்புகழோ ன்
விப்பிரரும்மகிழ் மேவிவாழ்த்து ம்
சுப்பிரமணிய னெனச்சொல்பண்டித ன்
வாழ்கவென்ன வாழ்த்துதூஉ ந்
தாழ்சடைக்கடவுள் சரணம்புய மே.

சிறப்புப்பாயிரம் - முற்றியது.

உ

கௌரன்மெண்டு யூனிவர்சிட்டி
பாடசாலைத் தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய
திருத்தணிகை
விசாகப்பெருமாளையர் இயற்றியது.

# சாத்து கவிகள்.

கட்டளைக்கலித்துறை.

சந்திரற்குக்கயநோயுந்தனபதிதன்பிணியு ம்
மந்தற்ககலாமுடமுமிருக்கவகையுமுண் டோ
அந்தமுறுசுப்பிரமணியப்பெயராண்டகைசெ ய்
விந்தவுரைபுனையிந்நூன்முன்னுளிலிருந்திடி னே,

முருகன்றுணை.

வித்துவான் காஞ்சீபுரம்,

சபாபதிமுதலியார்

மாணுக்கரில் ஒருவராகிய புரசை அஷ்டாவதானம்

# சபாபதிமுதலியார் இயற்றியது.

## நிலைமண்டில ஆசிரியப்பா.

சுகம்பெறுமதிஞர் துகளின்மெய்வித	ய
முகம்பெறுவானிடை முற்றுபேரின்	ப
வடிவாயமர்ந்துறை வரன்மறைமுத	லி
னெடிதாமியற்கை நிகழ்பெருங்கருணையி	ன்
திருவாய்மலர்ந்தருள் சுருதியுள்ளிட்ட	வை
யெவ்வகைமொழியினு மிஃதேமுதற்றெ	ன
வொவ்வுறவிளங்கி யுயர்சுரர்க்குரித்தா	ய்
வரித்தகீர்வாண மெனும்வடமொழி	யி
னிருத்தலாற்சிலர்க்கல தியம்பலும்படித்தலு	ங்
கருப்பொருளுணர்தலுந் திருத்தகவுணர்த்தலு	ம்
பெரும்பாலோர்க்குப் பெறலரிதெனநினை	இ
தரும்பொருட்கிடனெனத் தகுஞ்சொல்லுருவா	ந்
தேவியார்தந்தன திருநந்திதேவ	ர்
தாவில்கேள்விப்பயன் தன்வந்திரிகொளூஉ	க்
கவினியல்பயிலுமச் சுவினிதேவர்க்கு	க்
கூறியனநெடுங் குறுமுனிக்குதவ	லி
னீறிலம்முனிவர னிடப்புலத்தியற்கு	த்
தருமன்னோனிடைத் தன்மசௌமியன்பெ	ற்
றிகலறுமவற்கினி தியல்வழிபா	டு
நனிபுரிதேர னெனுமாண்புலமை	ச்
சீரியனவன்தரத் தெளிந்தபன்னூலு	ட்
டீசார்விலாஆயுள் வேதக்கடற்று	றை
முறைபலபுகுந்து முனிவறக்கா	ண
அறைதருமிந்நூ லின்றிமற்றவற்	றி

## சாத்துகவிகள்.

னுள்ளனதேர்ந்து தெள்ளிதின்மாந்தர் க்
குறுநோய்தீர்மருந் துற்றுழித்துணைபெறு ச்
சிறுவர்போன்மெனச் சிந்தையினைய ந்
திரிபறநன்கு சிதைவுறுதோர்ந் து
பரிபவநடைபடாப் பைந்தமிழ்மொழியி ன்
யாவரும்யாங்கணு மேவினர்களிப்பவு ம்
பாவினக்குழாமிதிற் பன்மாண்பெற வு
நின்றுநிலைதேர்பவர் நிறங்கிளர்சொற்பொ ரு
ளொன்றியசெஞ்சுவை யொருங்குணநயப்பவு ம்
ஈதிதன்பெயரென் றேதிமுன்னுதவி ய
தைலவருக்கச் சுருக்கமாமிதனை ப்
பயில்வுறவமைவாப் பல்காலாய்ந்து ம்
சொன்னலம்பொருணலம் சோர்வறக்காண்பா ன்
பன்மைசாலறிஞர் பாலவையுசாவி யு
நூலினுண்மையுங் கோலியவநுபவ ப்
பான்மைவளனும் பகர்வுறுமேனை ய
மேன்மைமருத்துணர் விற்பனமுதியர்த ங்
கரையில்கருத்துங் காண்வரநிறுத்து ம்
உரையுடன்அச்சில் நிரல்பெறப்பொறித்தன ன்
நம்பரன்தலங்களுள் உம்பருந்தத்த ம்
பதிதபூஉநாளும் பவத்தொடக்கறுப்பா ன்
விதிதகவிருக்கை மேவியூங்கணு கி
யிரண்டுதலையிட்ட முத்தொழிலியற் றி
யரண்கொளவுயிர்கட் காரருள்விளக்கு ஞ்
சிற்பரவொளியின் கற்பனைகடந் த
பதித்தஅம்புயமும் எடுத்தபங்கயமு ந்
துதித்துநாத்தழும்பத் தொழுமிடனென்ப து
வெள்ளித்தகட்டுப் பகட்டிளவா ளை
யள்ளற்பழனத் தகன்பணைமோட் டி
னிருங்கோட்டிணைய கருங்கொண்மூநிகர் கா
மேதிகள்செருத்தல் வியன்றலையெற்று பு
மோதியாங்கொழுகு முதிர்பாலுவட் டி
னுகளாமுடுகி யும்பர்த்துழாஅ ய்
நகலாத்தாமு நாளினக்குழாமென த்
தேவரும்அயிர்ப்பத் தாவியாங்க ண்

மாமழைசிதறு வார்கெழுசோணை யூ
டேமுறமீண்டுறாஉ மிலஞ்சியங்காமர ப்
பூந்துகடிமிர்ந்து பொன்னிறச்சிறைய ளி
தேந்துறையாடுந் தில்லைச்சிதம்ப ர
நற்றலவரிசை முத்தையனா னி
பெற்றநோன்மைகூர் பேறெனநிலைகொளு ம்
புத்திரனுலகுளோர்ப் பொரும்பிணிப்படர்ச்சி ப்
பணிதெறஆயுள் வேதபாஸ்கரனெ ன
நனிவருநல்லிசை நாற்றிசைநிறு வி
யமிழ்தினுமினிக்குந் தமிழறிநாவல ர்
பாமணிப்பொருட்டெனும் பதார்த்தகுணசி ந்
தாமணிதனக்குரை தந்தாரிய மா
மொழிதிகழ்ஜீவ ரக்ஷாமிருத ம்
கொழிதமிழ்வாக்கியக் கோவையிற்புனைந்தன ன்
மெய்வளர்வேத சைவசித்தாந்த த்
திருவேடஞ்சிவ பெருமானென வே
யொருவாமனநிலத் தூன்றியவுரவோ ன்
நதிகுலப்பாற்கடல் நல்கும்பெருநி தி
முதிருமெய்யடியர் முகனுடனகமு ம்
அலர்தரவவர்பணி தலைநின்றுளமகி ழ்
புரவலன்குவளையம் புனைபூந்தாரின ன்
பரவைசூழ்நிலம்பணி பழநியாண்டவர்க்கு த்
தொண்டுசெய்தோன்றல் சுப்பிரமணி ய
பண்டிதனென்னப் பகருமாதவ னே.

இ ் து.

கா - பச்சையப்பமுதலியார்

தலைமைக்கல்விச்சாலைத்தமிழ்த்தலைமைப்பண்டிதர்

## ஆ - சுப்பராயபிள்ளை இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

புகழ்பரவுநந்திபரம்பரைக்கோர்தீப ம்
போற்றுலங்குதேரனெனும்புலமையாள ன்
புராதனவாசிரியர்தம்பாற்சம்பாதித் த
பொருளையெலாமனுர்க்களிக்கப்போகாதென் றே

## சாத்துகவிகள்.

யகமதனிலுன்னியவைகளை நற்சொற் க
ளாயகடாரங்களிலிட்டவ்வவற்றி ற்
கான்றூர்தம்மாணையெனுங்கவசம்பூட் டி
யருந்தயிலச்சுருக்கப்புத்தகநிலத்தி ல்
திகழ்செய்யுளெனுமிருப்புக்கோட்டைக்குள்ளாய்ச்
சேமித்துவைத்தனன்முன்னாளின்னாளி ல்
சித்தர்குழாம்பணிபழனி பெரியசித்த ன்
றிருவருளாஞ்சருவாஞ்சனத்தைக்கொண் டே
சுகமருவப்புதையன்முற்றுமெடுத்தவற்றி ன்
சொந்தமைந்தர்தமக்களித்தான்றுகடீர்வாண ர்
துதியாயுள்வேதபாஸ்கரனென்றோது ஞ்
சுப்பிரமணியபண்டிதநற்சுகுணமா லே.

---

### இ ஃ து,

சென்னைக் கவரன்மெண்டு நார்மல் ஸ்கூல்

தமிழ்த்தலைமைப்புலவர்

கோமளபுரம்

# இராஜகோபாலபிள்ளையவர்கள்

### இ ய ற் றி ய து.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விண்ணோர்க்காக்குஞ்செவ்வேணிகர்ப் ப
விளைகொடுஞ்சூர்முதறடிந்துவிரிநீர்சூழ்ந் த
மண்ணோர்ப்புரந்திடுவான்சிதம்பரத் து
வந்துற்றுத்தைலவருக்கச்சுருக்க க்
கண்ணாரும்பொருள்விரித்தநன்றிநோக்கி ற்
கடவுண்மணிசுப்பிரமண்யக்கலைவலோனு க்
கெண்ணாருங்கைம்மாறுபிறிதில்லென் று
வேத்துவாந்தமிழ்க்கவிதைசாத்துவா மே.

சிவமயம்.

வித்வான் காஞ்சீபுரம்

சபாபதிமுதலியாரவர்கள்

மாணுக்கர்களிலோருவராகிய

## மயிலை-மா - சுப்பராயமுதலியாரால்

செய்யப்பட்டது.

உலகெலாம்புகழுமுரையாசிரியரென்றுபெயருறுமவரொலாங்குழுமி யே
யொப்பிலாத்தேரனருடயிலநூலுக்குரையுஞற்றிடற்கெண்ணியெண்ணி ப்
பலவகையினுஞ்செயக்கூடாதுவெள்கியிப்பாராசைவிட்டகன்று ர்
பதினெண்ணுட்டுச்சித்தர்களுமொருவர்கண்ணிற்படாமலேதிரிகின்றன ர்
இலகமரர்பிடகருஞ்சேடனும்விண்மண்ணிடங்களிற்போயொளித்தா ர்
இனியாவரேயிங்குவல்லர்சிவனேயென்னவெண்ணிநெஞ்சேங்குறுங்கா ல்
பெலமருத்துவர் தவட்பேறெனவுதித்தசுப்பிரமணியனென்னுமெங்கோ ன்
பேசுமன்னூற்குரையியற்றியச்சிட்டுப்பெரும்புகழ்படைத்தனன ரோ.

---

இ ௦௦ து.

இந்நூலுரையாசிரியர்மாணக்கரிலொருவராகிய

## ஆ-செ- வெங்கடாசலமுதலியார்

பாடியது.

ஏராருந்தில்லைநகர்தனினுறைசுப்பிரமணியவிறைவன்றன்னைச்
சீராருந்தைலவருக்கச்சுருக்கந்தனக்குரைசெய்தானென்பார்கள்
தேராருந்தேரையனன்னவனுகவுதித்துமுன்னஞ்செய்தநூற்குப்
பேராரும்பொருள்விரித்தானின்னுளிலெனப்புகழ்ந்துபேசுவாமால்.

కాంచీవిశ్వనాధశివాచార్య కృతోయంశ్లోకః॥

సుబ్రహ్మణ్యభిషఙ్మనేసకుతుకం తేరార్యశాస్త్రాంబుధావాకంఠంభువి

తైలవర్గసుజలం పీత్వాభృశంవర్షతి । ఏధంతేత్రశరీరిసస్య నివహారోగేతి బా

ధాంవినా । చిత్రంకీర్తిమరాళపండితమనః పద్మానిసోల్లాసకం॥

శతావధానినా - అప్పయ్యాచార్యేణ విరచితోయంశ్లోకః॥

వ్యాకుర్వన్తైలశాస్త్రం - తిమిరకులహరస్తేరయార్యప్రణీతం - యస్సా

మోదంవ్యతానీత్కువలయమురుజం సర్వదాత్తోదయస్సః । ఆయుర్వేదాబ్జ

బంధుంనవమవనితం తంసమీక్ష్యైవభాస్వాన్సుబ్రహ్మణ్యాభిధానం భ్రమతి

సచకితంవ్యోమ్నిలజ్జాభరార్తః॥

சாத்துக்கவிகள்.

முற்றியது.

உ

கணபதிதுணை.

சிவசுப்பிரமணியர்துணை.

# தைலவருக்கச் சுருக்கம்

## மூலமும் உரையும்.

### கடவுள்வணக்கம்.

(விநாயகர்துதி- நேரிசைவெண்பா.)

மணியாந் தைல வருக்கச் சுருக்கந்
திணியாயுள் வேதமுறை செப்பும்- பிணியாவும்
போக்கிக்காக் குந்தைலம் போற்குடிலை வேழமிறை
நீக்கிக்காக் குந்தமிழை நின்று.

இதன்பொருள். உறுதியாகிய ஆயுள்வேதமுறைப்படி தைலங்களைச் சொல்லுகின்ற கண்மணிபோன்ற தமிழ்ப்பாஷையிற் செய்த தைலவருக்கச் சுருக்கம் என்னும் இந்நூலைப் பிரணவாகார விநாயகக் கடவுளானவர் சகல ரோகத்தையும் போக்கித் தேகத்தைப் பாதுகாக்குந் தைலத்தைப்போல எமதுள்ளத்தில் நின்று, இடையூறகற்றிப் பாதுகாத்தருள்புரிவர்-என்றவாறு.—மிறை-குற்றம்.

(விசேஷவுரை.)

கண்மணியானது எல்லாப்பொருள்களையும் அறிவதற்குக் கருவியாக இருப்பது போல் இந்நூல் சகல தைலவருக்கங்களின் கைபாகமுதலிய யாவையும் அறிவிக்குங் கருவியாக இருப்பதால் மணியாந் தைலம் என்றும், ஏனையநூல்கள் போலாது கடவுள் போல் நித்தியமாயிருப்பதென்னும் பெருமைதோன்றத் திணியாயுள் வேதம் என்றும், விநாயகர், பிரமன், விஷ்ணு முதலிய தேவர்கள் எல்லாம் வணங்கும் முதற்கடவுள் என்பது விளங்கக் குடிலைவேழம் என்றும், வியந்து கூறினார்.

இத்தைலம், முடிவில்லாத பேரின்பத்தை யருளிச்செய்யும் விநாயகருடைய திருவடிகளோடு ஒப்புச்சொல்லத்தகாததாயினும் உலகத்துக்குள் வியாதிகளை நீக்கி உயிர்களைப் பாதுகாக்குந்தன்மையிற் சிறந்தமையால் உவமையாயது.—இனி - இதுபோல்வருஞ் செய்யுட்களுக்கெல்லாம் இதுவே கருத்தாக வமைத்துக்கொள்க. (க)

(பரசிவவணக்கம்.)

காக்கவெண்ணெ யொத்துக் கலந்தெங்கு நின்றன்பர்க்
கூக்கவெண்ணே நல்கு முமைநாதன்-றேக்கச்
சயில✻வருக் கச்சுருக்கத் தைக்கடுகாப் பாம்போற்
றயிலவருக் கச்சுருக்கத் தை.

இ-ள். எள்ளுக்குளிருக்கும் நெய்யைப்போல அகிலமெங்கு நிறைந்து நின்று அந் நிலையை யுணர்ந்துய்ய அடியவருக்கருள்புரிபவரும், பார்வதி தேவியாருக்கு நாயகரு மாகிய பரமேச்சுரர் வளப்ப நிறைந்த மலையெருக்கென்னு மாமூலியானது அச்சுருக் கத் தைக்கின்ற பாம்பினது விஷத்தைத்தீர்த்து உயிரைக் காப்பதுபோலத் தைலவருக் கச் சுருக்கமென்னு மிந்நூலைக்காக்கக்கடவர்- எ-று.—* அருக்கு- எருக்கு, அச்சுருக்க தை கடு-என்பதற்கு-அச்சு - சரீரத்தை, உருக்க- கெடுக்கும்படி, தை - தைக்கத்தக்க, கடு- பாம்பின்பல் விஷத்துக்கு - எனப்பதம் பிரித்துரைத்துக் கொள்க. பாம்பின்பல் என்னும்- ஒருசொல்வருவித்துரைக்கப்பட்டது. தைத்தல்- அழுந்தல். (உ)

(பார்வதிதேவியார்துதி.)

மாணத் தயில் வருக்கச் சுருக்கமெனு
மேணத் தமிழிற் கிரட்சையாங்-காணக்
கடையில்வரு மெண்ணெயெனக் காதலன்பர் பாலிற்
றடையில்வரு மம்பிகைபொற் றாள்.

இ-ள். செக்கில் எள்ளிட்டு ஆடுகிறபோது உண்டாகாநின்ற எண்ணெயை மொண்டு கொண்டபின்- கடைசியில் வருகிற எண்ணெயானது (மகா தைலங்களைப்போல் திரிதோஷங்களா லுண்டாகாநின்ற நோய்களை விலக்கித் தேகத்தைப் பாதுகாப்பது போல்) அன்புள்ள அடியார்களிடத்துத் தடையின்றி வந்தருளுகின்ற பராசத்தியி னுடைய- சவுந்தரியமுள்ள திருவடிகள் மாக்ஷிமை தங்கிய தைலவருக்கச்சுருக்கமென் கிற நிலைபெற்ற இந்தத்தமிழ் நூலுக்குக் காப்பாகும்-எ-று. (௩)

(விநாயகர்-சுப்பிரமணியர்- இவர்கள் துதி-கட்டளைக்கலித்துறை.)

சீரார்தைலமணப்பதஞ்செப்பிடிற்றீப்பிணிக ள்
சாராவகல்வனபோலுமையீன்றருடந்திமுக ன்
காராரவுணக்கடலுண்டவேற்படைக்கந்தனெந் தை
யேரார்மணப்பதஞ்செப்பினமிந்நூற்கிழிசொலின் றே.

இ-ள். பார்வதி தேவியா ரீன்றருளிய யானை முகமுள்ள விநாயகர் - மேகநிறம் பொருந்திய சூரபத்மன் முதலிய அசுரரென்னுங்கடலையுண்ட வேலாயுத மேந்திய சுப் பிர மணியக்கடவுளாகிய எம்மையன்-என்னும் இவர்களுடைய தெய்வமணங் கமழும் திருவடிகளைத்தோத்திரித்தோ மாகையால், பெரிய தைலங்கள் காச்சுகையில் பிறக்கிற மணப்பதத்தைக்கண்டு இது நல்ல பக்குவ பாகமென்று பண்டிதர்கள் மனங்களித்துச் சொன்னமாத்திரத்தில் பொல்லாத நோய்கள் முழுவதுந் தங்காமல் நீங்குவனபோல் இந்நூலினுக்குக் குற்றமாகிய சொல் இல்லையாய்விடும்-எ-று. (௪)

(குருபரம்பரை-பலதேவர்துதி-விருத்தம்.)

சாதிகுறுந்தைலவரியார்க்குநிறையா யு
டந்தளித்தாலெனவிந்நூறனை நாளும்புரக் க
வாதிபரைநந்தியமுதக்கடத்தோடுதித் தோ
னச்சுவனிதேவர்விரியலைகடலைதூர்ந்தோ ன்,

கோதிலரும்புலத்தியனந்தருமசவுமியனி க்
குரவருஞ்சித்தருஞ்சுரருங்கூறுமுனிவர ரு
மோதிமத்தரரியுரகர்மூர்சுடரெண்பா ல
ரொளிர்வசுக்களெழுமாதருயர்வயிரவரு மே.

இ-ள். ஆசிரியவருக்கத்தில் தலைமைத்தன்மை பூண்டுள்ள திருக்கயிலை நாதர் - பார்வதிதேவியார் - நந்திதேவர் (கையில்) அமிர்தக்கடத்தோடு திருப்பாற்கடலிற் பிறந்த தன்வந்திரி பகவான் - அச்சுவனிதேவர் - அலைகளைப் பரப்புகின்ற சமுத்திரத்தைப் பானஞ்செய்த அகத்தியர்- புலத்தியர் - நமது சற்குருவாகிய தரும சவுமியர் - முதலிய ஆசான்மாரும்- சித்தபுருஷர்களும்- முப்பத்துமுக்கோடி தேவரும்- நாற்பத்தெண்ணாயிரம் இருடியரும்-நாகலோகத்தாரும்-சூரியனும்-சந்திரனும்-அக்கினிதேவனும் - அஷ்டதிக்குப்பாலகரும்-பிரமதேவரும்-மஹாவிஷ்ணுவும் -அஷ்டவசுக்களும் - சப்தமாதர்களும்-வயிரவரும்-மேன்மையுள்ள நற்றைலப்புகையானது யாவருக்கும் பூரணாயுளைக் கொடுத்து இரக்ஷணை செய்வதுபோல இந்நூலை முற்றுப்பெற அருளி இரக்ஷணை செய்வர் - எ-று. (ரு)

(அவையடக்கம்.)

வாளா விருந்தாலும் வாதித்தென் காதலென்சொற்
கேளாத வைவிடுக்குங் கீர்த்தியிதே -நாளாய்ந்தோர்
தீரனிவ னென்பார் சிலரின்னூ லைப்பழிச்சுத்
தேரனிவ னென்பார் சிரித்து.

இ- ள். யான் எனது புல்லறிவை யுணர்ந்து வாளா விருந்தாலும் இந்நூலை இயற்ற வேண்டுமென்னும் எனது பேரவாவானது என்னுடன் வாதித்து என்சொல்லைக் கேளாமல் அது சபையில் எனக்கு உண்டாக்கும் கீர்த்தி இதுவாகும் - அஃதெதுவெனில் ஆயுள்வேதியர் இந்நூலைப்பழித்து இவன் தீரனென்பார் - வேறு சிலர் சிரித்து இவன் தேரன் என்பார்கள்.

பழித்து-சிரித்து-என்னும் மொழிகளால்-தீரன்-தேரன்-என்பவை அத்தன்மையில்லாமையைக்குறிப்பாக உணர்த்தின.—கடவுள் வணக்கமுற்றியது. (சு)

## பாயிரம்.

(மருத்துவனிலக்கணம் - வி-ம்.)

தெய்வவுபாசனை பலநூலெல்லைகாண் ட
திரிகரணசுத்திபன்னோய்தீர்த்தனு ரு
நைவகன்றதீரமதிநுட்பஞ்சான்றோ ர்
நட்பொழுக்கமேன்மைகுணமன்புள்ளானு ய்
மெய்வசுதைவிகலையணங்குறைபதார்த் த
விதியுடற்காதாரமடலங்கிமாந்த ல்
நைவருமெண்பேதமெலாமுணர்ந்துற்றுனாய் க்
காணிலந்தமருத்துவன்றைக்கரணியுண் ணோ

இ-ள். தேவதாவுபாசனை-பலசாஸ்திரங்களை ஆதியோடந்தமாக ஆராய்ச்சிசெய்து அறிகுதல்-மனம்-வாக்கு-காயம் என்னும் திரிகரணசுத்தி- பலவியாதிகளைத் தீர்க்குதல்- எந்நாளும் வியாதியைக்கண்டு அஞ்சாததீரத்துவம் - மிகுந்த புத்தி நுட்பம் - பெரியோர்களுடைய சிநேகம் - ஆசாரம்-மேம்பாடு - நல்லகுணம் - அன்பு - இத்தன்மைகளுள்ளவனுகிப் பிணியாளனது- தேகம் - தேசம் - காலம் - ரோகம் - ஔஷதம்-பதார்த்தகுணம் - சரீரத்துக்குள்ள ஆதாரம் - உதராக்கினி - தேகபலம் - ஆகாரம் - கைபாகம்-செய்பாகம் - தீக்ஷபாகம்- இன்னநோய்க்கு இத்தனைநாள் மருந்தூட்டவேண்டுமென்கிற காலஅளவு-என்னும் இப்பேதங்களையெல்லாம் அறிந்திருப்பவனுகத்தெரிந்தால், அந்தவைத்தியன்கொடுக்கும் சஞ்சீவியையொத்த - மருந்தை உண்ணக்கடவை எ-று.—சரீரத்துக்குள்ள ஆதாரபேதமாவது, வாதம்-பித்தம்-சிலேஷ்மம் - ரசதாது- ரத்ததாது - மாமிசதாது - மேதோதாது — அஸ்திதாது - மச்சைதாது - சுக்கிலதாது — மலம் - மூத்திரம்-என்னும்-கஉ-ம்-ஆம். உதராக்கினிபேதமாவது, சமாக்கினி - விஷமாக்கினி- தீக்ஷ்ணுக்கினி-மந்தாக்கினி-என்னும் - ச ம்- ஆம். தேகபலமாவது, சகசபலம்- காலபலம்- யுக்திகிருதபலம்-என்னும்-ங ம்-ஆம்.இப்பேதங்களை- ஜீவரக்ஷாமிர்தமென்னும்- சாஸ்திரத்தில்- இரண்டாவதுபக்கத்தில்- வாதசுபாவகுணங்கூறிய விடத்தும், கச-வது-கரு-வது - பக்கங்களிலும் - காண்க. (க)

(கைபார்த்தமருத்துவன் நடத்தை-வெ-பா.)

கன்மவுரு நோயதைமுக் கண்கொடறி வுற்றறிந்தார்
தன்மநீ ராடற் சதத்துடனெட் - டின்மையெனி
லங்கைபதந் தூய்மையின்றே லங்குலிபூ வெற்றலின்றேற்
கங்கை பதம்புனிறு காண்.

இ-ள். நோயானது கன்ம ரூபமாகையால், அந்த நோயை மூன்று விரலைக்கொண்டு (பிணியாளனுடைய கைமுதலாகிய தசவித நாடி ஸ்தானங்களையுந்) தொட்டறிந்து (அதுவுமன்றி அஷ்டவித பரீக்ஷையினுலும்) அறிந்த மருத்துவர்கள் முக்கியமாக நடந்துக்கொள்ளத்தக்கது, ஙா அ - ஸ்நாஞ்செய்தல்-அல்லது-கை கால்களைச் சுத்தியாவது செய்தல்-அல்லது அவ்விரலை பூமியிற் றட்டுதலாம். இப்படிக்குச் செய்யாவிடில், சகல பாவங்களையும் நிவிர்த்திசெய்யும் கங்காநதியையொத்த வைத்தியருக்கும்-பக்குவமாகச் செய்யப்பட்டிருக்கிற ஔஷதங்களுக்கும்-ஆசுசம் உண்டாம் - எ-று.—கண்போலத் தெரிவிக்கின்றமையால் விரலைக்கண்ணென்றூர். இவ்வொழுக்கமில்லாத வைத்தியர்கள் கைம்மருந்து பிணியை நீக்காதென்பது கருத்து. (உ)

(பிணியாளனிலக்கணம்-வி-ம்.)

அருப்பமுறி னரசெனினுந் திர்ப்பானைக்க ண்
டழைத்தலனை யாதியரு மவனென்றூர்த ல்
விருப்பமுறத் தவிசிருத்தன் மெய்யன்பாட ல்
வேண்டடலீந் திடலுறைபேற் றுண்டலத்தை த்
திருப்பவருந் துயராற்றற் சரதங்கூற ற்
செப்புளொடுங் கற்பன்மருந் தொழித்தலூர் றூா

மிருப்பகற்று முறைகுயிற்ற லிவையுள்ளா                    னே
லிவனுமம் புகலுநர்க்கு மின்றுநோ                    யே.

இ-ள். இராஜனே யானாலும் தனக்கு வியாதி சம்பவித்தால் வைத்தியரைக்கண்டு உபசாரத்துட னழைக்கச் செய்தல் - தாய் தந்தை குரு தெய்வம் நமக்கு இந்த வைத்தியரே யென்றுணர்தல் - விருப்பமுண்டாகும்படி ஆசனத்தி லிருக்கச் செய்தல்- உண்மையான அன்பு வைத்தல் - ஔஷதங்களுக்கு வேண்டுந் திரவியங்கொடுத்தல்- அவர்கொடுக்கின்ற மருந்தை யிரண்டு கையினாலும் வாங்கி உண்ணுதல்-ஔஷதத்தை வேண்டாமென்று மாற்றும்படி உண்டாகும் வருத்தத்தைச் சகித்துக்கொள்ளுதல்- மருந்துண்ணலில் தனக்கிருக்குங் குண குணங்களை உண்மையாகச் சொல்லுதல் (அன்றியும்) அவர் சொல்லுக்குள் அடங்கியிருத்தல் - கண்டகண்ட ஔஷதங்களை உண்ணுமல் நீக்குதல்-பூர்வகன்மத்தினால் வியாதிசம்பவிப்பதாதலால் அதனை நிவிர்த்தி செய்துக் கொள்ளுதல் -என்னும் இக்குணங்களையுடையவனா யிருப்பானானால், இவன் பேரை யுச்சரிப்பவர்களுக்கும் வியாதியணுகாது-எ-று. (௩)

(பாகஞ்செய்வானிலக்கணம் - வெ - பா.)

பிணியர்க் குரியர் பிடக்குளத்தை யொப்ப
ரணியிற் சிறந்தநட்ப ராம்பற் - பணியர்க்குட்
டுப்புறையை யுண்மைமிகு தூய்மையிவை யார்ந்தாரை
யொப்புறையை யாடற் குவந்து.

இ-ள். பிணியாளர்களிடத்தி லிருந்து ஔஷதபாகஞ் செய்கின்றவர்கள் அவர்களுக்கு உரிமையுள்ளவர்களும், மிகுந்த நன்மையுள்ள சினேகிதர்களும், வைத்தியர் மனதை யொத்தவர்களுமாக இருக்கவேண்டும் - அத்தன்மையர்க ளில்லாதபக்ஷத்தில் மற்ற ஏவலாளிகளுக்குள், தேகபலம் - பிணியாளர்களுடைய ஆயுசுவிர்த்தியை விரும்புதல் - புத்திநுட்பம்-சத்தியம்-உள்ளும் புறமும் பரிசுத்தம்-என்னும் நற்குணமுள்ளவர்களை ஔஷதபாகஞ் செய்யவைத்துக்கொள்ள வேண்டும்-எ-று. (௪)

(தைலப் பிறப்புவகை - வி - ம்.)

துதியிழுதுற்பவம்பெயர்மிக்கெனினுமவையீராறுட்சுருங்குமந்                    த
விதியுணருங்கருத்துளதேற்சுருதிமுறையிட்டபடிவிரித்துரைப்பா                    ம்
கொதியுருக்குபுடம்பட்டித்தீநீராதவநிலவிற்கூவனேக்க                    ம்
பதியிறும்புநீராவிசுடரெந்திரங்களிலுற்பவமாநெய்                    யே.

இ-ள். பெரியோர்களாற் சொல்லுகின்ற இழுது என்கிற தைலமானது அனந்தம் பிறப்பையும் பெயரையும் விரிவாகப் பெற்றிருந்தாலும் முடிவில் - ௧௨- வகைப்பிறப்பினுள்ளும் - ௧௨- வகைப்பெயரினுள்ளும் அடங்கும் - அந்த இலக்கணத்தை யறிய வேண்டு மென்கிற எண்ணமிருக்குமாயில் - ஆயுள்வேதம் கூறியவாறே கூறுவாம்- (கேட்பாயாக.) (கொதித்தல் - உருக்கல் - புடம் - தீநீர் - ஆதவம் - பூமி - மரம்-மலை. சலம் - புகை-சுடர்-எந்திரம் - என்னும்- ௧௨- ஸ்தானங்களைப்பற்றி அவற்றின் பெயர்களைப்பெற்று - ௧௨- விதத் தைலம் பிறக்கும்.) அவையாவன, (முத்துக்கொட்டை முதலிய நுட்பத் தினுசுகளை யிடித்துச் சலத்திற்கரைத்துக் கொதிக்கவைப்பதில் நின்

றும் பிறப்பதுகொதித் தைலம்,) (வெண்ணெய் கோழிமுட்டைக்கரு முதலிய வஸ்துக்களை உருக்குவதனாற் பிறப்பது உருக்குத் தைலம்,) (அடியில் பணம்போலத்துவாரமிட்ட ஒரு கடத்திற்குள் சிவனார்வேம்பு முதலிய திரவியங்களை நிறைத்து வாய்க்குச் சீலமண்செய்து கீழ்ப்புறத்தில் கலசம் வைத்துப் புடம்போடுவதனாற் பிறப்பது புடத் தைலம்,) (சந்தனக்கட்டை முதலிய மணமுள்ள சரக்குகளைத் தூளாக்கிப்பானையிற்போட்டுச் சலம் விட்டுப் பட்டிகட்டியிறக்குகின்ற தீநீரினால் பிறப்பது தீநீர்த்தைலம்,) (எள்ளுடன் சிலசரக்குகளைச் சேர்த்தரைத்த கற்கமருந்தைச் சூரியபுடமாகவைக்கும்போது வெய்யிலின் வெப்பத்தினால் பிறப்பது ஆதவத் தைலம்,) (ஓதமில்லாத பூமிக்குள்ளிருந்து கொப்பளித்துத் தானே வருவது மண் தைலம்,) (மரத்தில் வெட்டுப்பட்ட இடத்தில் நின்றும் பிறப்பது - விருக்கத் தைலம்,) (உயர்ந்தமலைகளிலிருந்து வழிவதுசிலைத் தைலம்,) (புனுகுச்சட்ட முதலியதுகளை நறுக்கிச் சலத்தி லூறவைப்பதனாற் பிறப்பது நீர்த் தைலம்,) (மட்டுப்பால்-சாம்பிராணி முதலிய சரக்குகளைநெருப்பில் காய்ந்த கலசத்திற்போட்டு அதன்மேல் சலநிரப்பிய தாம்பாளத்தை வைக்க அந்தப்புகையால் பிறப்பது ஆவித் தைலம்,) (பாதரச முதலிய சரக்குகளை அரைத்துச் சீலையிற்றடவிக் காயவைத்ததை யிருப்புக்கதிரில் பந்தம்போற் சுருட்டிக்கட்டித் தைலங்களில் தோய்த்துக் கொளுத்தும்போது அதில் நின்றும் சுடரோடே பிறப்பது சுடர்த் தயிலம்,) (எள்ளாதி வித்துக்களில் நின்றும் செக்கு முதலிய எந்திரங்களினாற் பிறப்பது எந்திரத் தயிலம்,) என்னும் இவைகளாம்-எ-று. (௫)

{ சகல தைலங்களும் ஐவகைக்குள் அடங்கும் என்பதும் அவற்றுள் ஒவ்வொன்றின் வன்மையும் கூறியது-வி-ம். }

பருதியொளி தைலவருக் கச்சுருக்க நூற்கு ட்<br>
படுதைல மைவிகற்பப் படுமவையா வனவோ ர்<br>
சுருதிமொழி முடித்தயில முடங்கு குடித்தயில ங்<br>
தொக்கிலிடு பிடித்தயிலந் துளைச்சிகிச்சைத் தயில ங்<br>
குருதிவழி சிலைத்தயில மென்பவையாஞ் சிலநெ ய்<br>
கூறுமைந்து நான்குமூன் றிரண்டொன்றிற் காங்கா ண்<br>
கருதிமுதற் றயிலமுதன் மேகராஜாங்க ங்<br>
கடையிடையி லுணர்வரெல்லாங் கற்குமருத்துவ ரே.

இ - ள். சூரியனது ஒளிபோன்ற இத்தயில வருக்கச் சுருக்கமென்னும் நூலிற் சொல்லும் சகல தயிலங்களும் ஒப்பற்ற ஆயுள்வேதத்திற் கூறும்படியான சிரசிற் கிடுகின்ற முடித்தயிலம் - உள்ளுக்குக் குடிக்கின்ற குடித்தயிலம் - சருமத்தின் மீது தடவிப்பிடிக்கின்ற பிடித்தயிலம்- நவத்துவாரங்களின் வழியாகச் செலுத்துகின்ற துளைச்சிகிச்சைத் தயிலம் -புரைகளின் வழியாக ரத்தமுதலியவைகளை ஒழுகப்பண்ணுகின்ற துஷ்ட விரணங்களுக்கு உதவுகின்ற சிலைத்தயிலம் - என ஐவகைக்குள் அடங்கும். இவற்றுள் சில தயிலங்கள் மேற்கூறிய ஐந்திடத்தைப்பற்றிய ஐவகைச்சிகிச்சைக்கும்- சில நான்கு வகைக்கும் - சில மூன்று இரண்டு ஒன்றிற்கும் ஆகும். இவ்விவரங்களை இந்நூலில் முறையாகவைத்த முதற் றயிலமாகிய சுக்குத்தயிலம் ஆதியாக மேகராஜாங்கத்தயிலம் அந்தமாக இவைகளின் நடுவிலுள்ள தயிலவகைகளை யெல்லாம் நன்றாய் ஆராய்ச்சிசெய்த வயித்தியர்கள் சிந்தித்தறிவார்கள்-எ-று. (௬)

(தைலம் இப்படிப்பட்டதென்பது - வி - ம்.)

திரவியப் பார்வைபுனி தம்பச்சை யெரிசுடர்ச் சேர்வைமோ தேற்றுகளிடை
பரவுநீர் பாக்கியஞ்சு ரசமாதி நெய்யளவை பகர்கற்க வெண்பொடிநி றை
விரவரைப் புக்கரைப் பிடலெரிப் புத்துழவல் வேண்டுபத மூற்றல்சுத் தி
யரவெனுந் துதியிவிரு பத்திரண் டுந்தவறி டாதுபுரி யிற்றயில மே.

இ-ள். குடிநீர் கற்கம் முதலியவைகளுக்கு ஆகுந் திரவியங்களை மாறுபாடில்லாத வண்ணம் பார்வையிடுதல் - அவைகளைச் சுத்திசெய்குதல் - பச்சையாயாவது அனலில் வறுத்தாவது சூரியபுடம் வைத்தாவது இடிக்குதல் - தூளாக்குதல் - மதித்தல் - ஆற்றுநீர் - குடிநீர் - சுரசமாதிகள் - நெய்வகை இவைகளின் அளவுகாண்டல் - கற்கமருந்துக்களின் தொகை யித்தனையென்றறிகுதல் - அவைகளைப் பொடிசெய்தல் - பின்பு நிறுத்துப்பார்க்குதல் - அவைகளைக்கலந்தரைக்குதல் - இதைக் குடிநீரிற் கரைக்குதல் - அப்பாண்டத்தை அடுப்பின் மிசைபொருந்தவைத்தல் - எரிக்குதல் - துழாவுதல் - வாத முதலிய தேகிகளுக்கு வேண்டிய பக்குவபாகத்தை விரும்புதல் - வடிக்குதல் - சுத்தி என்னுந் தானிய புடமிடுதல் - கருமசாந்திசெய்யுதல் - என்னும் இவ்விருபத்திரண்டு விதச்செய்கையும் பிசகாதுசெய்து முடிக்கில் தயிலமாம் - எ-று. (எ)

(தைலாதிகளின் வீரியமும் பயனுங்கூறியது - வி - ம்.)

இத்தயிலம் புனலெருநற் காப்பாதி யாற்பைங்கூ ழிறுமாந் தோங்கிச்
சித்தமுவப் பப்பயனைத் தந்தளித்தா லெனப்பயனைச் செழிக்க நல்கும்
பத்தரிற் பிறழ்ந்திடினோ நலனையொழித் தளவுபடாப் படரை நல்கும்
சுத்தவிலே காதிசிந் தூரபஸ்மங் கட்குமிந்தச் சுருதி தானே.

இ-ள். தண்ணீர் - எரு - காவல் - முதலியவற்றால் தவறுதலில்லாத பயிரானது செழுமையோடும் வளர்ந்து தன்னை விளைத்தவனுடைய மனங்களிக்கப் பயனையுங் கொடுத்து உலகத்தையும் இரக்ஷிப்பதுபோல் (மேற்சொன்ன - உஉ - விதச்செய்கைகளையுடைய தைலமானது பரிமளத்தோடு) வீரியத்தையடைந்து தன்னைவிளைவித்த பண்டிதர் மனதைக்களிப்பிப்பதுமன்றி பிணியையொழித்து உலகத்தவரையும் இரக்ஷிக்கும். அந்தவிதிகள் தவறுமாயின் அளவுக்கடங்காதரோகத்தையெல்லாம் உண்டாக்கும். இதுவுமன்றி—லேகியமுதலிய சிந்தூர பஸ்மங்களுக்கும் இந்தச்செய்யுளையே அவ்வவ்விடத்தில் விதியாகக்கொள்க. எ-று. (அ)

(தைலாதிகளின் குணம் - வெ - பா.)

எள்ளினெய்யு முக்கூட் டெனுநெய்யு மானெய்யும்
விள்ளுதயி லாதியென வீறுநெய்யு - மூள்ளபடி
வாரந் தனக்கிருநாள் வைத்தாடி னோய்களதி
காரந் தனக்கிடமிற் காண்.

இ-ள். சுத்த எள்ளினது நெய் - முக்கூட்டுத்தயிலம் - பசுவினதுநெய் - சிகிச்சையில் சொல்லுகின்ற நல்ல தைலங்கள் ஆகிய இவைகளிலொன்றைச் சரீரத்திற்குப் பொருந்தியவாறே நான்கு நாட்கொருவிசையாக மூழ்கி வருகின்றவர்களிடத்தில் நோய்களுக்கொரு அதிகாரமுஞ் செல்லாது. எ-று. (கூ)

(இதுவுமது.)

நல்குவதூமுத்தரமும்முழிநெய் மே
ஞவலங்கொண்டெழினடத்துநாதனுயு ண்
மல்குவதுவாய்மையென்பர்நிற்கவன் னி
மகிழ்பூசையொடுக்கிநெய்க்கண்மருவுவா ச
மல்குவதுதெறச்சில்லிட்டெழுமண்கட் டி
யக்கடத்தைநெற்புடச்சாலையிற்செலுத்தி ப்
புல்குவதுமும்மதிக்கேறுதமைத்த ப்
பூசைசெய்தீந்தாட்டுமுறைபோற்றியாட் டே.

இ-ள், அவிர்ப்பாகம்கொடுக்கும் விதியாவது, அவ் வக்கினியை வளர்த்து அதில் (௩)தரம் - ஒவ்வொரு அகப்பைத் தைலத்தைச் சொரிவதாம். அப்படிச்சொரியும் போது, அவ் வக்கினியினது-நடு-நா என்கிற சுவாலையானது மேல் வலங்கொண்டு சுழித்தெழும்பிக் குடைபோல் நிற்குமாயின் - இத் தைலம் செய்வித்தவன் தீர்க்காயுள் பெறுவது வுண்மை எனப்பெரியோர் சொல்வர்-இது நிற்க-முன்பு கட்டிய காப்புமுதலியவைகளை விசர்ச்சனஞ் செய்து அக்கினிபூசை ஒடுக்கி தைலத்தினது பரிமளம் நீங்காவண்ணம் ஓடுமூடி-எழுசீலை மண்செய்து அப் பாத்திரத்தை நெற்புடசாலையில் மூன்றுமாதத்திற்கு உயராமல் வைத்து - தைலபூசைசெய்து எடுத்து முறைப்படி பகுத்துக்கொடுத்து விதிப்படிக்குஸ்நானஞ்செய்விக்கவும்-எ-று. (சுரு)

(இதுவுமது.)

ஆட்டுநோய்முகன்கணக்கன்றினங்கடோ று
மறமெலிந்தோர்சுரநோயாலழன்றோர்க்கெல் லா
நாட்டுநாளெட்டினின்றேழாறைந்தென் னு
நாட்களிலாட்டிப்பழக்கிநான்கிலாட்டா ட்
டாட்டுநோய்செருக்கொழியுங்காறும்பத் தி
யங்காப்பாயணங்கிலுறினங்கூழ்தீர்ப்பா ய்
மீட்டுமோருரையுமின்றிம்முகவுரைக்கு ள்
விரிதைலவிதிமுழுதும்விளங்குமா தோ.

இ-ள், ஸ்நானம் செய்விப்பது, சனிவாரம்-புதவாரந்தோறுமாம். ஆனால் மிகவும் மெலிந்த வருக்கும் - சுரரோகத்தால் வெப்பங்கொண்ட வருக்கும்(அ)நாட்கொரு தரம் செய்வித்துப் பின்பு - ஒவ்வொரு நாளாகக் குறைத்துக் குறைத்துச் செய்வித்துப்பழக்கிப் பின்பு(௪)நாட்கொரு தரமாக - ரோகநிசேஷமாகு மட்டும் செய்வித்துப் பத்தியகிரமத்தில் வைக்கவும். இவ்விதம் செய்யில் - சகல பிணிகளும் நீங்கும். ஒருவேளை, நீங்காவிடில், அவ்வவற்றிற்குத் தக்கவாறே கருமசாந்திகளைச் செய்விக்கில் அவைகள் சந்தேகமற நீங்குவனவாம். இனி, நாம்சொல்லவேண்டுவ தொன்றுமில்லை இப் பாயிரத்தின்கண் மேற்கூறப்படும் தைலவிதிக ளெல்லாம் (உள்ளங்கை நெல்லிக்கனிபோற் றெளிவாக) விளங்கும் - எ - று. (சுசு)

அனுபந்தமுகவுரை முற்றியது.

---

உ
கணபதி துணை.

சிவசுப்பிரமணியர் துணை.

# தைலவகைகள்.

(சுக்குத் தைலம்—வி-ம்.)

சீரமிர்தமூடுவிடமஃதையவ்விடமறச்சீவுதறிமூட்டியெண்பா ன்
சேராற்றறற்கடனதட்டமதிலொன்றாய்ச்சிறுக்கிவிடுதிலநெய்யமிர்த ம்
வாரநீர்க்கரையரையரத்தைமுக்கடுமுஸ்தைமஞ்சிட்டிமூட்பலமகி ல்
வரிவரியெருக்கடிகுலாதினிகதாகுவயம்வலிவன்னிதாருசந்த ங்
காரமுறுதேவதாபஞ்சவிகைதலரூபகத்தாதிலொத்துகத்தோ ல்
கர்ச்சூர்பலோத்தமையோடிந்துகத்தூரிகாஸ்மீரமிருபத்தாறை யு
மாரநுண்டுகள்புரிபதப்பலமெண்ணெய்யிலிட்டந்தசரக்கிரண் டு
மடியிலிடுகலசத்துளரைநிட்கமிதையெரித்தாந்தைலமக்கடமி டே.

இ-ள், மாச்சுக்கை, விஷம் என்கிற - தோலை அறச்சீவி கரணை கரணையாக நறுக்கி (பலம்-அ௰) நிறுத்துக் குடிநீர்ப்பாண்டத்திலிட்டு அடுப்பேற்றி (அ) மரக்கால் ஆற்றுச்சலம் விட்டுக் கமலாக்கினியாக எரித்து (அ-ல்) ஒருபங்காக்கி தைலப்பாத்திரத்தில்வடித்து இக்கஷாயத்தில் (௨-என்கிற) (உ-படி) நல்லெண்ணெய்யும் மற்றொரு (௨-என்கிற) (உ-படி) மசுவின்பாலும் - கூடவிட்டு - சிற்றரத்தை-சுக்கு-மிளகு-திப்பலி கோரைக்கிழங்கு - மஞ்சிட்டிவேர் - கடுக்காய் - நெல்லிக்காய் - தான்றிக்காய் - அகிற்கட்டை - தண்ணீர் விட்டான் கிழங்கு - எருக்கின் வேர்ப்பட்டை - கடகரோகணி - கோஷ்டம் - கொடிவேலிவேர் - தேவதாரிக்கட்டை-சந்தனக்கட்டை - வெள்ளைக்குங்குலியம் - செவ்வியம் - ஆமணக்கின்வேர் - வெள்ளலத்திப்பட்டை - பேரீச்சங்காய் - கொடிமுந்திரிப்பழம் - இந்துப்பு - கஸ்தூரி - குங்குமப்பூ- என்னும் (உசு) சரக்குவகைச் சரக்குகளேயும்-தனித்தனியேமிகவும் - நுண்ணியபொடியாகச்செய்து - ஈற்றிற்கூறிய-கஸ்தூரி - குங்குமப்பூ - என்னும் (உ-ம்) நீங்கலாக - மற்றை (உச) வகைத்தூளேயும் ஒவ்வொன்று (வ-பலம்) விழுக்காடு நிறுத்து மேற்கூறிய-எண்ணெய்யிலிட்டு-கஸ்தூரி-குங்குமப்பூத் தூளிரண்டையும் (௨-௨-வராகனிடை) வடிகலசத்திலிட்டு வைத்துக்கொண்டு - அந்த எண்ணெய்யைச் சிறிய தீயால் எரித்துத் துழாவித் தைலத்தை மெழுகு பதத்தில் வடிகடத்தில் வடித்துக் கொள்வாயாக-எ-று. (க)

(இதன்மகிமை-வி-ம்.)

கடத்திலிடுநாகராதித்தைலஞ்சுத்திமதிகளமமிட்டா ற்
காசினியிலதன்பெருமையெமையினவேலதுதொழிலிற்காட்டுமாயி ன்
சடத்திலுறுமாவர்த்தவாதமெலாந்துவாலேயாற்றங்காநா சி
தனினசியம்புரிந்திடிஞேபீநசமூந்தலேநோயுந்தரிவாமூ ர

விடத்திலடர்காலொடுபல்லரணையுங்கொப்பளிக்கவருமிருசெவிக் கு
ளிருதுளிவிட்டிடக்குத்தல்விடுஞ்சிரநோய் தோற்பைக்குளிட்டிட்டாற்
திடத்திடுகோழைக்கட்டுங்குரற்கம்மலும்முழுக்கிற்றீருமின்னு ஞ் [போங்
செப்பின்மிகப்பெருகுமிதன்பத்தியமிச்சாப்பத்தியந்தேர்ந்திடா யே.

இ-ன், அவ்வாறுகடத்தில் வடித்த நாகராதிஎன்கிற சுக்குத் தைலம் - நெல் லுக்குள் - ஒரு மாதம் புடம் வைத்தெடுக்கச்சுத்தியாம். இதன் பெருமையை நம் மைக் கேட்கவேண்டுவதில்லை. அதுவே,தனது தொழிலினால் யாவருக்குந்தெரிவிக்கும். ஆயினும்-அதனை-ஆளும் முறைமையை ஆராயுமிடத்தில் - துவாலைச் சிகிச்சை என்கிற மேற் பூச்சினால், தேகத்தில்நிலைத்த ஆவர்த்த வாதங்களெல்லாம் நீங்கும். (உ) நாசிகளி லும் நசியம் பண்ணினால், பீநசரோகங்களும் - தலைவலிகளும் ஒழியும், வாயில்விட்டுக் கொப்பளித்தால், பல்லுகளின் வேரைப்பற்றிய வாதநோயும் - பல்லரணை என்கிற ரோ கமும் விலகும். காதுக்குள் (உ) துளிவிட்டால், கற்ணசூலை நிவிர்த்தியாம். மிருதுவாகிய தோலில் புரைவைத்தூக்குல்லாதைத்து அதில் விட்டுச் சிரசில் போட்டுக் கொண்டால், சிரோரோகந்தீரும். ஸ்நானமேசெய்தால், பலம்பொருந்திய கோழைக்கட்டுகளும்-சுரசா தரோகமும் போம். இன்னும் - கூறப்புகின் மிகவும் பெருகும், இதற்கு -இச்சாப்பத்தி யமாம்-எ-று. (உ)

(இஞ்சித் தைலம்-வி-ம்.)

மதின்முசுக்கைகரிசாலையெண்ணுவிவ்வைந்து ம்
வகைக்கிரதம்படிபடிபெய்மலயசந்திட்சணம் பா
லதிலிரண்டுமிழைவெவ்வேறிரண்டரையாமிரஞ்சேர் த்
தட்டிரதம்வாளகஞ்சுராலைமும்மைப்பொடியு ம்
மதியொருநிட்கஞ்சுத்திமுட்டியிடக்கலத்து ள்
வடியாடுச்சந்தலைநோய்வாதவுடற்கடுப் பு
முதிர்செவிநோய்தலைவலிபீநசமுகநோய்கபநோ ய்
முதலியநோயும்பகன்முன்முளைத்தெழும்பூமொழி யே.

இ-ன், இஞ்சிச்சாறு - முசுமுசுக்கைச்சாறு - கையாந்தகரைச்சாறு - நல்லெண் ணெய் - பசுவின்பால் - ஆகிய - இவ் (ரு-ம்) வகை-க-க்கு - ஒவ்வொருபடி தைலப்பாத் திரத்திலூற்றிச் சந்தனக்கட்டையும்-மிளகும் (உ௲-உ௲-பலம்.ஆக) நிறுத்து - பசும்பால் விட்டரைத்து - அந்த எண்ணெய்யில் சேர்த்துப் பாகமாகக்காய்ச்சி - வடிகலசத்துள்- குங்குமப்பூ(வராகனிடை-க) வெட்டிவேர் (பலம்-௲)சாம்பிராணி (வராகனிடை-க) என் னும்-இம் (ந)சரக்குகளையும் பொடித்துத்தூவி இதில் வடித்தெடுத்து வைத்த தைலத் தை-ஸ்நானஞ்செய்யில்-உச்சந்தலைநோய்-வாதத்தாலுண்டாகியதேகக்கடுப்பு-அதிகரித்த செவிநோய் - தலைநோய் - பீநசநோய் - முகநோய் - கபநோய் - முதலிய நோய்களும், சூரியகிரணம்பட்ட*பூவைப்போல் - நாமமும் ரூபமும் இல்லாமற்போய்விடும் - எ - று.
*பூ-என்பது-பூநீருவதற்கு முன்பு தோன்றுங் கதிராம். (ந)

(மிளகுத் தைலம்-வி-ம்.)

பிரியல்வழுதுணைமூலமாலூரமச்சடைவியாக்கிரிகரஞ்சமத் த
மேகநாதஞ்சுரசமாகுளிமூடங்கன்முலைவிண்டவொருபாணென்றிவ ண்

பிரகுஞ்சமொன்றினுக்கொருபானிதற்கம்புபெய்தூணிநான்கினென்றுய் ப்
பிறகிறுத்தெட்டயிலமிருபடிபெய்சிதமைசொரிபீரிரண்டுபடிகா ண்
திரிபலேமரீசமம்பதிவிடைகுபேரிகைசிகிப்பீலியொலிசாதிச ங்
திரிபூரம்வெட்பாலேபங்கிவித்தரிசனந்திவிபிநாமய்குன்றிவே ர்
கிருமியரிசிஞ்சைவித்துரியொருபடிதொடுநவங்கிளர்வகைக்கொருகஃசெலா ங்
கிண்டியிழையப்பால்கொடதிலிடெரிவாசங்கிளம்பின்வடிசுத்திபுரி யே.

இ-ள், மிளகு - சிறுகத்தரி - வில்வம் - கீழ்வாய்நெல்லி - கண்டங்கத்தரி- புன்கு ஊமத்தை - சிறுகீரை - நொச்சில் - இவற்றின்வேர் - சிற்றரத்தை - தாழைவிழுது- ஆக தினுசுகள் (௰௧-ம்) வகை - க - க்கு (பலம் - ௰) இவைகளை உரலில் துவைத்துப் பாண்டத்திலிட்டுத் தூணி-என்கிற (௰௬- படி) சலம் விட்டு -அதை (௪-ல்)ஒரு பங்கா கக்காய்ச்சி யிறுத்த குடிநீரில் - எள்ளினது நெய் (படி - உ-ம்) வெள்ளாட்டுப்பால் (படி-௪ - ம்) சேர்த்து - கடுக்காய் - நெல்லிக்காய்- தாணிக்காய் - மிளகு - திப்பலி அதி விடையம் - வட்டத்திருப்பி - மயிலிறகு - கோஷ்டம் - சாதிக்காய்-சுக்கு- கருப்பூரம்- வெட்பாலேயரிசி - கஞ்சாவிதை - மஞ்சள் - சித்திரமூலம்- அதிமதுரம்-வாய்விளங்கம்- புளியங்கொட்டைத்தோல் - என்னும் - கற்கதிரவியம் (௰௯-ம்) வகை-க- க்கு (பலம்-வ) விழுக்காடு - முற்கூறிய பால்விட்டரைத்து அதிற்கரைத்துக் காய்ச்சிப் பக்குவமணம் உண்டாகும்போது- வடித்து - அதை, (௩) நாட்கு மேற்பட அமைந்த நாள்வரைக்கும் நெற்புடத்தில் வைப்பாயாக-எ-று. (௪)

(இதன் மகிமை-வி-ம்.)

சுத்திசெய்சருமபரிசுத்தமாகநற்றயிலங்காணி ன்
முத்தியவாதமெங்கேமூர்த்தத்தின்கனப்பதெங் கே
குத்தியசுழல்வாய்வெங்கேகூக்குரற்செவிடதெங் கே
புத்தியின்மலினமெங்கேபுகழுளீர்புகலுவீ ரே.

இ - ள், சுத்திசெய்த பரிசுத்தமாகிய நல்ல மிளகுத் தைலத்தினுல் நாட்பட்ட வாதரோகமும் - சிரோபாரமும் - ஆவர்த்தவாதமும்-கூச்சலிட்டுச் சொல்லும்படிக்குச் செய்கின்ற செவிட்டு ரோகமும் - புத்தியினது மந்தமும். எங்கேபோய்விடுமோ - புகழையுடையபண்டிதரே சொல்வீராக-எ-று.—நீங்கிவிடும்-என்பது-கருத்து. (ரு)

(வேறுவகை மிளகுத் தைலம்.)

வல்லிசப்படியுகரமாபமிருஙகரமடவந்தபுனலனைஙகரமே ன்
மதிலார்க்கிலேத்தமாலகிமத்தமுதிர்சம்பமாதுலங்கத்திரதமு ங்
தில்லியமுமுருவினுக்கொருககரமதுரந்சிசிங்கிமுக்கடுமூப்பால ஞ்
சிவதைசவியஞ்சடைவிளங்கமிருதுடிமுஸ்தைசிகரத்துவக்கொட்டறை
துல்லியமசீதளம்பூலாங்கிழங்கசைமதூகவலர்கச்சநுளைபொ ன்
றாவியமுந்திரிகைமாதுவசைபுஷ்கரந்தோணிவான்மீகஞ்சல ஞ்
சொல்லியசரக்கெண்முதலக்கரம்வகைக்குத்தொடிக்குஞறைவகரமுழுது ஞ்
சுப்பிரதஷ்டச்சுரதமிட்டிழைத்தொன்றுய்த்துழாவியடுவடிதைல மே.

இ-ள், மிளகு (படி-உ-ல்) (இரண்டு-ங) சலம் விட்டுக்காய்ச்சி (ர-ங) கஷாயமாக வடித்து - இதில் - முதிர்ந்த இஞ்சி - எருக்கிலை-கீழ்வாய்நெல்லி-ஊமத்தை -பழுத்துதிர்ந்த எலுமிச்சம்பழம் - கொமட்டிமாதுளம்பழம் - இவ் (சு - ன்) ரசமும் - நல்லெண்ணெய்யும் -வகை - க - க்கு (படி - க) ஆக சேர்த்து- அதிமதுரம்-மரமஞ்சள்-கர்க்கடகசிங்கி * திரிகடு * திரிபலை - சிவதை - செவ்வியம் - சடாமாஞ்சில் - வாய்விளங்கம் - ஏலம் - காட்டேலம் - கோரைக்கிழங்கு - லவங்கப்பட்டை- ஒட்டறை-அப்பிரகம்-கருப்பூரம் - பூலாங்கிழங்கு - சீரகம் - இலுப்பைப்பூ - கடகரோகணி - கடல்நுரை -சிறுநாகப்பூ - மயிலிறகு - அரப்பொடி - கொடிமுந்திரிப்பழம் - பெண்வசம்புகோஷ்டம்-சிறுவழுதுணைவேர் - குங்குமப்பூ- வெட்டிவேர் - என்னும் - கற்கதிரவியம் (கூ-ம்)வகை-க-க்கு (பலம்-வ) விழுக்காடு-அத்திப்பட்டைச்சாற்றில்அரைத்துக்கரைத்து-ஒன்றுபடத்துழாவிக்காச்சிப் பதத்தில் - தைலத்தை வடிப்பாயாக - எ - று.—

(இரண்டிற்கு) உகரமும், (குருணிக்கு) நகரமும், (பதக்குக்கு) இரு நகரமும், (தூணிக்கு) அரை நகரமும், (ஒன்றிற்கு) ககரமும், (காலுக்கு) வகரமுமாக வழங்குதலின் இந்நூலாசிரியரும் - அவைகளையே தொகையாகக்கூறினர். உயிருமுடம்பும் முப்பது எழுத்துக்களாதலின் (கூ) என்னும் தொகை - க்கு முதல் அக்கரமென்றார். * திரிகடு * திரிபலை இவைகள் (சு) சரக்குகளாகவிருந்தபோதிலும் - தொகைச்சரக்கு என்னும் விதியினால் இங்ஙனம்-அவைகளை இரண்டு சரக்காகவேகொள்க. (சு)

(இதன்மகிமை-வி-ம்.)

வடித்திடுமிக்கறித்தைலந்துட்டிடையுள்ளருந்திடினும்வாரந்தோறு ம்
பிடித்திடினுமாடிடினுஞ்சோபைபாண்டுருமனீர்ப்பிணிவிசர்ச் சி
நடித்திடச்செயுஞ்சூதிகாவாதந்தலைவலிபன்னமைச்சனூ தை
தடித்திடுசீரணச்சுரமாதியநோயுநகுலசர்ப்பசாலமா மே.

இ - ள், இவ்வாறு வடித்த கறி என்கிற மிளகுத் தைலத்தை ஒரு துட்டிடையளவாக உள்ளுக்குச் சாப்பிட்டாலும் - தினந்தினமும் - சரீரத்தில் தடவிப்பிடித்தாலும் - வாரத்துக்கொருதரம் - ஸ்நானஞ்செய்தாலும் - சோபை - பாண்டு - காசம் சலக்கோவை-விசர்ச்சி - கூத்தாடச்செய்கின்ற சூதிகாவாதம் - தலைவலி - பலவாறாகிய தினவு - வாதரோகம் - விஷமிக்கின்ற சீரணசுரம் - முதலிய ரோகங்களும் - கீரிப்பிள்ளையைக்கண்ட சர்ப்பக்கூட்டம்போல் நாசத்தையடையும்-எ-று. (எ)

(சீரகத் தைலம்-வெ-பா.)

அசைத்தொடியொன் றெண்ணெய் யரைக்குளகம் பாண்டத்
திசைத்தொடியக் காய்ச்சி யிறுத்தா - டசைத்தொடியத்
தள்ளும்பித் தக்கிச்சூர் சர்த்திதலை நோயலச
மள்ளும்பித் துக்கொள்ளு மால்.

இ-ள், (க-பலம்) சீரகத்தை (க-படி) நல்லெண்ணெய்யிற்போட்டு தைலப்பாண்டத்திலூற்றி ஷை சீரகம் - ஒடியத்தக்க பதத்தில்வடித்து - வைத்துக்கொண்டு - இதை, ஸ்நானஞ்செய்தால் - சிரசிலேறிச்சுழலச்செய்து கீழேதள்ளுவதானபித்தம் - நேத்திரரோகம் - வாந்திரோகம் - தலைவலி-மந்தம் - அள்ளுநோய் - என்னும் - ரோகங்களுக்கெல்லாம் பயித்தியம் பிடிக்கும்-எ-று.—எனவே நீங்கும் என்பதாம். (அ)

(வாதகேசரித் தைலம்-வி-ம்.)

குடமொடுநொச்சிதழுத்தாழைகொச்சையருக்கெண்ணோரண்ட ங்
கூறியவேழின்முதன்மூன்றுங்கோமிதுனம்பாறுவிநேய ம்
படிபடிதத்தம்முறவேபெய்பண்டிதவாயுமரேணுகையு ம்
பருமரசோனங்கமழ்சரணம்பரையருணுதம்புட்கரமு க்
கடுகடுகீரைத்தஃதஃதோகாசிடைமும்மூன்றிழையமுதா ற்
கரையடுவடியிதனபிதானங்கண்டுகொள்வாதகேசரியா ம்
பிடிபிடிநற்றயிலந்தடவிப்பேராவாதக்குழுவுட னே
பிசறியசருமத்திமிர்வாய்வும்பீடுறுமிற்புலியணேசுக மே.

இ-ள், சதுரக்கள்ளி - நொச்சி- தழுதாழை- இவற்றின் ரசங்கள்-வெள்ளாட்டுப் பால் - எருக்கம்பால் - எண்ணெய்-ஆமணக்குநெய்-என்னும்-இவ் (எ-ம்) வகை-க-க்கு ஒவ்வொருபடி பாத்திரத்தில்விட்டு - ஒன்றுறக்கலக்கி - கடுக்காய் - காட்டுமிளகு-பரும் வெள்ளைப்பூண்டு - வாசனையுள்ளபெருங்காயம் - நெல்லிக்காய்கந்தகம் - கோஷ்டம் - சுக்கு - மிளகு - திப்பலி - கடுகு - என்னும் - கற்கமருந்துகள் (ம - ம்) வகை - க- க்கு- (௩) காசிடையாக நிறுத்து அவைகளை - ஷை - பால் விட்டரைத்துக் கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடிக்கவும்-இது வாதகேசரி- என்னும் பெயரையுடைய நல்லதைலமாம். இதைத் தேகத்தில் - தடவிப்பிடித்தால் - தீராதவாதரோகக்கூட்டமும்-சப்த தாதுக்களிலும்கலந்த திமிர்வாதமும் - பூனையைச் சேர்ந்த கிளிப்பிள்ளையைப்போலாம் - எ - று.——பூனையிருக்கும் இடத்தில் - கிளிப்பிள்ளை அணுகாததுபோல் - இத்தைலம் இருக்கும் இடத்தில் நோய் அணுகாதென்பது கருத்து. (௯)

(வாதாந்தத் தைலம்-வி-ம்.)

கோரண்டம்பலேயெருக்காமணக்குநொச்சிதசமூலங்குலமூவைந்து ங்
கோவிருதூணியிற்பப்பத்தாம்பலமச்சடைசளிட்டுக்குறுக்கெட்டொன் று
யோரண்டந்திரியாட்சிநூவுநெய்யோர்படிபடியாமிவைவெண்மைப் பா
லேகமுறக்கலந்தசுவகந்திருப்பைமுஸ்தைமஞ்சளிந்துப்பேல ச்
சீரண்டமிலவங்கவுரியடைசுக்ககில்வசம்புதேவதாரஞ் (து
சிற்றரத்தையொருபான்மூன்றுெவ்வொன்றுக்கொருகஃசாச்சேர்த்திடித்
வாரண்டமுறுபரமவணுவாக்கிவிரவியெரிவடியிதன்பே ர்
வாதாந்தத்தைலமிதைவிரிக்குட்சுத்திபுரிவாரநா ளே.

இ-ள், செம்முள்ளி - சிற்றுமுட்டி - எருக்கு - ஆமணக்கு - நொச்சி-கண்டங்கத்தரி- சிறுவழுதுணை - சிற்றுமல்லி - பேராமல்லி - நெருஞ்சில் - வில்வம் - பெருங்குமிழ் - தழுதாழை - பாதிரி - வாகை - என்னும் - இவற்றின்வேர்வகை (மரு-ம்) தினுசுக - க்கு(பலம் - ம) ஆக - நிறுத்து - இடித்து - இருதூணி தண்ணீர் விட்டுக்காய்ச்சி- (அ-ல்-க) ஆக கஷாயம்வடித்து அதில் - சிற்றுமணக்கு - தேங்காய் - எள்ளு - என்னும் இம் (௩) நெய்களும்- வகை—க-க்கு (க-படியும்) வெள்ளாட்டுப்பால்(௩)படியும் ஊற்றிக் கலக்கி அசுவகந்தி - சதகுப்பை - கோரைக்கிழங்கு - மஞ்சள் - இந்துப்பு - ஏலம்

லவங்கப்பட்டை - லவங்கப்பத்திரி - சுக்கு - அகிற்கட்டை - வசம்பு - தேவதாரம் சிற்றரைத்தை - என்னும் சரக்குவகை (௰௩-ம்) வகை-க-க்கு (பலம்-வ) விழுக்காடு-கூட்டியிடித்து உயர்ந்த ஆகாயத்திற்பொருந்தும் பரம அணுவையொத்த தூளாக்கி ஷை எண்ணெயில் கலந்து எரித்துப் பதத்தில் வடித்துக்கொள். இதன்பெயர்-வாதராந்தத்தைலமாம்-இதை - அ – நாள்வரையில் நெற்புடம் வைப்பாயாக எ-று. (௰)

(இதன் மகிமை-வி-ம்.)

வாரமேதணந்தெடுத்துவைத்தநெய்யுளேக்காலெல்லா ஞ்
சேரமேலெங்கும்பூசித்தினந்தினம்பிடிக்கிற்பொல்லா க்
கோரமேபுரியும்வாதக்குழாமறிஞோர்க்காமந் த
காரமேநாளுமிச்சாப்பத்தியங்கண்டுகொள் ளே.

இ-ள், நெற்புடம்வைத்து (அ) நாளுங்கழித்தபின்பு எடுத்துவைத்துக் கொண்டு-இதை, ரோமகூபங்களெல்லாம் நிறையும்படிக்குத் தேகமுழுதும் பூசித் தினந்தோறும் பிடிப்பிக்கில்-மிகுந்தபயங்கரத்தைச் செய்யாநின்ற வாதநோய்க் கூட்டமானவை பெரியோர்களுக்கு உண்டாகின்ற அஞ்ஞானம்போலாம். இதற்கு, எப்போதும் இச்சாபத்தியமாம் – எ - று.—பெரியோரை அஞ்ஞானம் அணுகாததுபோல் - இச் சிகிச்சைக்குரியோரை நோயணுகாதென்பதாம். (௰௧)

(உரோகசஞ்சீவித்தைலம்-வி-ம்)

சுகபலேச்சாறதன்பாலிவ்வடைவேகான ச்
  சுருகியுளும்புரண்டையிரதம்பற்பாட ம்
வெகுபிரசைக்குடிநீரிவ்வேழும்பற்ப ம்
  வெவ்வேறைந்தைந்தெணெய்பத்துயராட்டுப்பா ற்
றுகைபளவைந்தெரிமுகிபால்வாளமெல்லா ஞ்
  சுடரில்வடிபூசுணடல்வாதஞ்சந் நி
யுருகொடுஞ்சுவாசகாசங்களும் போ
  முரோகசஞ்சீவியிதற்குரியபே ரே.

இ-ள், எருக்கிலைச்சாறு - அதன்பால் - காட்டுச்சதுரக்கள்ளிச்சாறு - அதன்பால்-பிரண்டைச்சாறு - பற்பாடகக்கஷாயம் - மெருகின்கிழங்குக் கஷாயம் - என்னும் - இவ் (எ-ம்) வகை - க - க்கு (பலம்-ரு) நல்லெண்ணெய் (பலம்-௰) வெள்ளாட்டுப்பால் (பலம்-சரு) இவைகளை ஒன்றுபடக்கலந்து இதில்நறுக்கியசேராங்கொட்டை (பலம்-ரு-ம்) சுத்திசெய்த வாளப்பருப்பு (பலம்-ரு-ம்) சேர்த்து-தீபாக்கினியாக எரித்துப் பதத்தில் வடித்து வைத்துக்கொண்டு-இதைச் சிறுகத்தொட்டு -மேலுக்கும்பூசி - வெற்றிலையிற்றேய்த்து உள்ளுக்கும் கொள்ளுவையாகில் - வன்மையுள்ள வாதரோகமும்-சந்நிபாதமும் - கோழைவிழும்படியான சுவாசரோகமும் நீங்கும். இதற்கு, உரோக சஞ்சீவித் தைலமென்பதே வுரியபெயராம்-எ-று.—

சஞ்சீவியானது - மரணத்தைத்தடுத்துச் சீவிக்கச்செய்யுந் தன்மையைப்போல்-இத் தைலமும்-மரணத்தையே தராநின்ற - மஹாவாதரோகங்களையும் விபரீதசந்நி பாதங்களையும் - கொடிய சுவாசகாசரோகங்களையும் - நீக்கி ரோகியைச் சீவிக்கச் செய்வதனால் உரோகசஞ்சீவித் தைலமெனக்கூறினார். (௰௨)

(தசமூலத்தைலம்-வி-ம்.)

தசமூலந்தொடியத்தொகைதத்தந்தவழ்புனலிருதூ ணி
தழலம்பொருசிவமெண்ணெயதுமாடந்தருகட்டிருசிவமி ந
துதிரந்துடிசாமிருசந்திருதருவொலிமுப்பலைமது ர
முயர்சிவனியுரிமிசிநீர்முளிவிதையோசனவல்லிம ர
நிசிகூகையினீறட்டவருக்கிவைநீடாரகையெணெ லா
நேரவிழைத்தலைதலைதனைமுட்டியங்கேயத்திடுவடியு ண்
பிசகறமுழுகப்பனிலக்குழுவைப்பிணிகிமுனைதிர்மறமா ம்
பிடகர்சொல்வார்தசமூலத்தைலப்பெருமையெமக்கரி தே.

இ-ள், கண்டங்கத்தரி - சிறுவழுதுணை - சிற்றாமல்லி-பேராமல்லி - நெருஞ்சில்-கூவிளை-பெருங்குமிழ் - தழுதாழை - பாதிரி-வாகை-யென்னும்-இப் (௰-வேரும்) வகை-க-க்கு(பலம்-௰) ஆக இடித்து அதில்(இருதூணி) ஆற்றுச்சலம் விட்டுக்காய்ச்சி - ஒருமரக்கால் கஷாயமாகவடித்து - நல்லெண்ணெய் (ஒருமரக்காலும்) உளுந்துக்கஷாயம் (பதக்கும்)விட்டு - எட்டி விதை-விலாமிச்சு-ஏலம்-கோரைக்கிழங்கு-சந்தனம்-செஞ்சந்தனம்-தேவதாரம் - சரளதேவதாரம்-கோஷ்டம்-கடு - நெல்லி-தான்றி - அதிமதுரம்-வெட்பாலைப்பட்டை - சதகுப்பை - நீர்முள்ளிவிதை - மந்திட்டிவேர் - மரமஞ்சள்-கூகைநீறு*அட்டவருக்கம்-என்னும்-கற்கவகை-உஎ-ம்-வகை-க-க்கு(பலம்-൨)ஆக-சேர்த்து-அந்தக்கஷாயத்தினால் மைபோலரைத்து அந்த எண்ணெய்யிற் கரைத்து-எரித்துப் பதத்தில் வடித்துவைத்துக்கொண்டு - இதை, துட்டிடை யளவையாக உள்ளுக்குஞ் சாப்பிட்டு - விதிபோல் அப்பியங்கனமுஞ்செய்து - மேலுக்கும் தடவிப் பிடிப்பிப்பையாகில் - வாதரோகக் கூட்டங்களெல்லாம் - பரமசிவனுடன் எதிர்த்த - இயமனைப்போலாம்-இத் தசமூலத் தைலத்தின் பெருமையைச் சொல்லவென்றால்-பண்டிதரே சொல்வார்கள் - யாம்சொல்லப்புகின் அரிதாம்-எ-று. (௰௩)

* அஷ்டவருக்கம் ஆவன,சுக்கு-மிளகு-திப்பலி - இந்துப்பு-சீரகம் - கருஞ்சீரகம்-ஓமம்-பெருங்காயம்-என்பனவாம்.

(சரணாதித்தைலம்-வி-ம்.)

முதியசரண்மூலமொருதுலைக்கறனுற்குரு ணி
மொய்க்கவிட்டுநாலிலொன்றாய்முகித்தகுடிநீரி ற்
றதியமெண்ணெய்யவந்திதத்துவயந்தத்துவயமா த்
தன்னியஞ்சக்கரம்பாணந்தன்மூலஞ்சடி- லை
யதிமதுரஞ்சசிபலைதெய்வத்தருசித்திர க
மாகுலிமாவிலிங்குமிசியெரிமுகிமுன்பறைவே ர்
பதின்மூன்றும்வகைவகைக்குப்பற்பமிழைத்தமுதா ற்
பாய்ச்சியெலாங்கலக்கியட்டிப்பருவமுறவடி யே.

இ-ள், முதிர்ந்த அம்மையார் கூந்தல்வேர்(பலம்-௱-க்கு)(தூணி)தண்ணீர் விட்டுக்காய்ச்சி (ச-ல்-க-ஆக)வடித்தகஷாயத்தில் - தயிர்ச்சலம் - நல்லெண்ணெய் - காடிச்

## தைலவருக்கச்சுருக்கம்

சலம் - இம்(௯-ம்) வகை-க-க்கு (ஙு-யும்) முலைப்பால் (பதக்கும்) விட்டு-திப்பலி - திப்பலி மூலம்-சடாமாஞ்சில்-அதிமதுரம்-இந்துப்பு - சிற்றுமுட்டி - தேவதாரு - கொடிவேலி சிற்றரத்தை-மாவிலிங்குப்பட்டை- சதபுட்பி - சேராங்கொட்டை - அம்மையார் கூந் தல்வேர்-என்னும் கற்கவகை (௰௩-ம்) வகை-க-க்கு(பலம்-க-ஆக)ஷ பாலாலரைத்துக் கரைத்துக் கலக்கி மெதுவாக எரித்துப்பக்குவத்தில் வடிப்பாயாகவும்-எ-று. (௰௪)

(இதன் மகிமை-வி-ம்)

பருவத்தெடுத்ததைலமதைப்பதனம்பண்ணியொருவிரலொ ட்
டுருவத்தடவிப்பிடிப்பையெனிலொழியாக்குடைச்சலுதறுவ லி
சருவத்திமிர்வாதக்குழுவுந்தடிமுன்குயப்பாண்டத்தடுக்கா ந்
துருவத்தடைந்தோர்சரணுதிச்சுவைச்சத்தடலைத்துதிப்பா ரே.

இ-ள், இவ்வாறுவடித்த தைலத்தைப் பத்திரப்படுத்திக்கொண்டு - ஒருவிரலால் தொட்டுத்தடவிப்பிடிக்கில் நீங்காததேகக்குடைச்சலும் - உதறுவலியும் - சகலதிமிர் வாதக்கூட்டமும் - தடிக்குமுன் நேரிட்ட குயப்பாண்டத்தின் அடுக்குப்போலாம். இந்தச் சரணுதித் தைலத்தினது வன்மையை யாம் சொல்லுவதல்ல துருவநிலையை அடைந்த பெரியோர்களே சொல்வார்கள்-எ-று. (௰௫)

(நிற்குண்டித்தைலம்-வி-ம்)

சிதசுரசமார்க்கவஞ்சங்குசாறடைமுட்டிதேட்கடைபெரும்புன்முள் ளி
சிம்மமுகிபொடுதலைதமாலகியளர்க்கமெண்டெரிபணிருவகையிரத மு
மததளைப்படிகருமையமுதெணெயிரண்டிரண்டணைகடுகுபஞ்சாக்கி னி
யரோணுகஞ்சவ்வியம்பூதநாசினியோமமதிவிடைபாரங்கிமுஸ் தை
மதகரிக்கணைவச்சகத்தண்டுலம்பருமரத்துரிசுறுக்குமூல ம்
வாய்விளங்கங்கடுகைகொடிவேலிமதுரசைவசம்பிருபதிற்றிரண்டு ம்
பதமுறவவ்வமுதிழைவகைக்கரைவராகனிடைபாய்ச்சதிலெரித்துணுட ப்
பஞ்சகாசங்கயஞ்சரபமெதிர்சிங்கமாம்பகருநிற்குண்டியிம் தே.

இ-ள், வெண்ணொச்சி - கரிசலாங்கண்ணி, முள்ளுச்சங்கிலை - வெள்ளைச்சார வேளை - பேராமுட்டி - தேள்கொடுக்கிலை - பெரும்புல் - கண்டங்கத்தரி - ஆடாதோடை - பொடுதலை - கீழ்வாய்நெல்லி-தூதுளை-என்னும் (௰உ-ம்)வகை - க-க்கு-சாறு (படி-௨) ஆக சேர்த்து அதில் - வெள்ளாட்டுப்பால் (படி-உ-ம்) நல்லெண்ணெய்-(படி-உ-ம்) விட்டு-கடுகு * பஞ்சாக்கினி - காட்டுமிளகு - செவ்வியம் - பெருங்காயம்-ஓமம் - அதிவிடையம் - கண்டுபாரங்கி - கோரைக்கிழங்கு - யானைத்திப்பலி - வெட்பாலைஅரிசி-பெருமரப்பட்டை - திப்பலிக்கட்டை - வாய்விளங்கம் - கடகரோகணி-கொடிவேலி - பெருங்குரும்பை - வசம்பு - என்னும் கற்கவகை (உ௰உ-ம்) வகை க-க்கு (வராகனிடை-௨) விழுக்காடு-அவ் வெள்ளாட்டுப்பாலால்-மைபோல் அரைத்து அதிற்கரைத்துக் காய்ச்சிப்பதத்தில் வடித்துவைத்துக்கொண்டு இதைத் துட்டிடையளவாக உள்ளுக்குஞ் சாப்பிட்டு -ஸ்நானமுஞ்செய்தால் - ஐந்து வகை காசரோகங்

---

* பஞ்சாக்கினியாவன, சுக்கு-மிளகு-திப்பலி-சீரகம்-ஏலம்-என்னும் - இவைகளாம்.

களும் - க்ஷயரோகங்களும் - சிம்புள்பக்ஷிக்கெதிர்ப்பட்ட சிங்கத்தைப்போல் நாசம் அடையும்-இதுவே நிர்குண்டித்தைலமாம்-எ-று.—நிர்குண்டி-எ - து,நொச்சில்.(௯௯)

(மூலயோக நிற்குண்டித் தைலம்.)

தூயநொச்சியாமணக்கார்க்கசுவகந்திபுன் கா
 தொண்டைமூட்டிபருவாகைபுனமுருங்கைகூந் த
லாயில்குடம்பருங்குறிஞ்சிபதின்மூன்றும்வகைக் கி
 ணம்பலவேர்க்கம்புபதக்கடம்பிரண்டுபடியெ ண்
ணேயம்வெண்மையமுதுபடிபடி தருசுக்குழுந் தா
 நீடியரூமாலமராளங்கொடித்தீருக் கி
லாயவேழும்பலம்பாலஃதஃ தாட்டிடட்ட ப்
 பனிலவர்க்கமிலேச்சடைநிற்குண்டியிஃதா மே.

இ-ள், வெண்ணொச்சில்-ஆமணக்கு-எருக்கு- அசுவகந்தி-புன்கு - ஆதொண்டை-பேராமுட்டி - பருவாகை - புனமுருங்கை - குதிரைவாலி - ஆயில்மரம் - சதுரக்கள்ளி - பெருங்குறிஞ்சி-என்னும் (௰௩-ன்) வேரும்-வகை-க -க்கு (பலம்-௰) ஆக-இடித்துப் பாத்திரத்திலிட்டு (பதக்கு) தண்ணீர் விட்டுக் காய்ச்சி-உ-படியாக-வடித்த கஷாயத்தில்—எண்ணெய்யும் - வெள்ளாட்டுப்பாலும் - ஒரு ஒரு படிவிட்டு - தேவதாரம்-சுக்கு-உழுந்து - மாவிலிங்குப்பட்டை - குங்கிலியம் - சித்திரமூலம் மைசாட்சி-என்னும்-கற்கவகை(எ-ம்)வகை-க-க்கு (பலம்-ச) விழுக்காடு - ஷை - கஷாயத்தினால் அரைத்து கரைத்துக்காய்ச்சி-பக்குவத்தில் வடித்துத் தேகத்தில் பூசிப்பிடிப்பையாகில் வாதரோகக்கூட்டங்கள் இல்லையாம்-இதுவே-மூலயோகநிற்குண்டித் தைலமாம்.எ-று.

(இரதயோகநிற்குண்டித் தைலம்.)

பூருவச்சுரசங்கையான்பூண்டிஞ்சிமுருங்கைபாக ற்
 புட்பேந்திரமார்க்குவங்கம்புற்பதிவனம்பத்தோடொ ன்
றேரொருவகைக்குச்சாறங்கூற்றுழக்குடனெண்ணே ய
 மொருபடிவாரரத்தையொலிகடமதுரங்காய ந்
தாருமுக்கடுவிளங்கஞ்சரஷபஞ்சித்திரமூல ந்
 தனித்தனிக்கஃசீராறுந்தாக்கிழைத்தெரித்தாடத் தை
நேருறச்செவிக்குட்குத்துநீடுபீநசமேனேய் போ
 நீயுணரிரதயோகநிற்குண்டித்தைலமீ தே.

இ-ள். முதிர்ந்தநொச்சி - கையாந்தகரை-வெள்ளைப்பூண்டு — இஞ்சி - முருங்கையிலை-பாகல் -சண்பகத்தழை-எருக்கிலை- கத்தரி- வாழைக்கிழங்கு - துளசி - என்னும்-(௰க)வகைச்சாறுகளும் வகை-க-க்கு (௩) விழுக்காடு - நல்லெண்ணெய் - படி-க-ல்-விட்டு-அரத்தை-கோஷ்டம் - மரமஞ்சள் - அதிமதுரம் - பெருங்காயம் - தேவதாரி-சுக்கு - மிளகு-திப்பலி - வாய்விளங்கம்-கடுகு-சித்திரமூலம் - என்னும் கற்கதிரவியம் (௰உ-ம்)வகை-க-க்கு(பலம்-வ)விழுக்காடு-ஷை-ரசத்தினால் நன்றாயரைத்துக் கரைத்துக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்து - இதை, விதிபோல். - ஸ்நானஞ்செய்வித் தாலும்

செவிக்குள் துளிக்கணக்காகவிடுத்தாலும் நாட்பட்ட பீநசமும்-தலைநோயும் - நீங்கும் இதனை-இரதயோக நிற்குண்டித்தைலமென்று-நீ - அறியக்கடவாய். எ-று. (யஅ)

(சருவசித்த நிற்குண்டித்தைலம்.)

வெண்ணொச்சிச்சாறுநான்குவிடைக்கந்தச்சாறுநான் கு
வெள்ளெண்ணெய்ப்படியொன்றெல்லாம்விரவுவெண்கடுகுவே ணி
பெண்ணிச்சைதருமுருங்கைகட்டிசமம்பஷ்டைசுக் கு
பெருமுன்னைவேரிரத்தம்பிப்பலிதேக்கித்தொண்டு ம்
பண்ணச்சமாகக்கற்கம்பாவலேகைாவிளக்காய் ப்
பாவகனணுகவட்டிப்பத்தியம்புளிமோர்விட் டா
டுண்ணிச்சகத்தினுழுமுண்ணுக்கவ்விருமலெங் கே
யுலகமாதாவைச்சேர்வுற்றுயருநிற்குண்டியீ தே.

இ-ள், வெண்ணொச்சியிலைசாறு (படி-ச) செம்மணித் தக்காளிச்சாறு (படி-ச) வெண்மையாகக்கழுவிய எள்ளினநெய் (படி-க.) இம்(ங-ம்)கலந்து - ஒருபாத்திரத்தில்விட்டு- வெண்கடுகு - வசம்பு முருங்கைவிதை-வட்டத்திருப்பி-சுக்கு- பருமுன்னைவேர் - குங்குமப்பூ-திப்பலி - சிறுதேக்கு-என்னும் - கற்கவகை (கூ-ம்) வகை-க- (பலம் க) விழுக்காடு மேற்படி சாற்றினுல் நன்ருயரைத்து கரைத்து தீபாக்கினியாக எரித்துப் பதத்தில் வடித்து-இதை, முறைப்படி- ஸ்நானஞ்செய்தாலும் - உள்ளுக்குச் சாப்பிட்டாலும் தொங்குகின்ற உண்ணாக்கும் - அதனுல் வருகிற இருமலும் நீங்கும். பத்தியம். புளி-மோர்-நீக்கவும் - இதுவே - மணத்தக்காளி ரசங்கூடிய நிற்குண்டித்தைலமாம்.—எ-று.

இச் செய்யுளில் கற்கவகைக்கு - அளவை கூருமையால் - பேஷஸகற்பசாத்திர விதிப்படி - அளவை கூறலாயிற்று. (யகூ)

(சிறியநிற்குண்டித்தைலம்-வி-ம்.)

ஒருபடிநொச்சிச்சாருெடொப்பெண்ணெய்சடையைந்துப் பு
திரிகடுசிங்கிகுஷ்டந்தேக்குமுப்பலைவியாக்கி ரி
யொருபதினுறுஞ்சேர்த்தட்டொவ்வொருகஃசாடுண்ணி த்
திரிகபங்கடுப்புமேகுஞ்சிறியநிற்குண்டியீ தே.

இ-ள், நொச்சியிலைச்சாறு (படி-க)நல்லெண்ணெய் (படி-க) இவ்விரண்டையும்-ஒருபாத்திரத்தில் விட்டு-சடாமாஞ்சில் கல்லுப்பு- வளையலுப்பு — மண்ணுப்பு - வெடியுப்பு-அட்டுப்பு-சுக்கு - மிளகு - திப்பலி-கடுக்காய்ப்பூ , கோஷ்டம் - கண்டுபாரங்கி-கடுக்காய் - நெல்லிக்காய் - தான்றிக்காய் - கண்டங்கத்தரிவேர்-என்னும் - கற்கதிரவியம்(யகூ-ம் வகை-க-க்கு(பலம்-வ)விழுக்காடு-ஷை சாறுவிட்டரைத்து அதிற் கரைத்து எரித்துப் பக்குவத்தில் வடித்து - இதை ஸ்நானஞ்செய்தாலும் - உள்ளுக்குச் சாப்பிட்டாலும் - காசம் - சுவாசம் - க்ஷயம் - என்னும் மூவித கபரோகங்களும் சரீரக்கடுப்பும் - நீங்கும் - இதுவே - சிறிய நிற்குண்டித்தைலமாம்- எ-று. (உ0)

(ஆரநாளத் தைலம்—வி-ம்.)

காடியெணெய்பெருகம்புநாலொன் றனைப்படிகலந்தரேணுகமிருநி சி
யீடினற்சந்துமிசிகச்சோலமுத்தைமதுரங்கடுகையிவைநவம தே
கூடியவராகனிழையிட்டடிறுபூசியுட்கொண்டுபார்சீதசுர மு
மாடியமர்சீரணச்சுரமுமயிலுண்ணறலிதாரநாளத்தைல மே.

இ-ள், (சு-படி) புளித்த காடியும் (க-படி) நல்லெண்ணெய்யும் (ஃ—படி) தயிர்ச் சலமும் - ஒருபாத்திரத்திற்சேர்த்து - காட்டுமிளகு - கஸ்தூரிமஞ்சள் - கப்புமஞ்சள் உயர்ந்த நற்சந்தனம் - சதகுப்பை - கிச்சிலிக்கிழங்கு - கோரைக்கிழங்கு - அதிமதுரம்- கடகரோகணி-என்னும்-கற்கதிரவியம்-(கூ-ம்) வகை-க-க்கு (வராகனிடை-க) ஆக-காடிச் சலம்விட்டரைத்து அதிற்கரைத்து-சிறுக எரித்து வடித்து இதை, மேலுக்கும்பூசித்துட் டிடை அளவாக உள்ளுக்குஞ் சாப்பிட்டுப்பார்ப்பையாகில் - சீதசுரமும்-சீரணச்சுர மும் * இரும்பு உண்ட நீரைப்போலாம்- இதுவே - ஆரநாளத்தைலமாம்-எ-று. * இரு ம்பு உண்ட நீரானது-மீட்டும் தோற்றுதவாறுபோல் - அந்நோய்கள் தோற்றுவாம்.

(சுத்தியாரநாளத் தைலம்.)

சுத்திபுரிசவ்வீரமோர்ததிகணுன்கிவைத்தோயமொவ்வொன்றொருப டி
சுவச்சமொருபடிவடவைமுசருபடிநான்கறற்றுரோணமுட்புன்குரிகடு
பத்திரந்தசமூலமிருசடஞ்சலியிடுதபனனிலட்டியபாக்கிய ம்
படியிரண்டெல்லாம்விளாவுசசிவில்வவேர்பத்திரதாருகமரத் த
சித்திரகந்தன்மூலம்வைதேகிசடுமொவ்வொருதினுசினுக்கிருதொடியதி ற்
சேராருந்துகளாகவடுவெடும்போழ்துமாதிரிபலங்காற்பொடியுகு த்
தத்தியிறக்குகற்கத்தொடுண்கிரகணியழற்கருகுசருகுசுத் தி
யாராளத்தைலநற்றயிலமென்பர்மறையறையுமுறையறியறிஞ ரே.

இ-ள், கும்பிடுகிளிஞ்சில்-வீட்டிற்சேர்த்துவைத்தகாடி-பசுவின்மோர்-அதன்தயிர் - என்னும்-இந் நான்கின் - சலமும் - வகை - க-க்கு (படி-க) நல்லெண்ணெய் (படி- க) எருமைத்தயிர் (படி - ச) இவைகளுடன் - புன்கின்வேர்ப்பட்டை - சுக்கு-கண்டங்கத் தரி - சிறுவழுதுணை - சிற்றமல்லி - பேராமல்லி - நெருஞ்சில்-வில்வம்-பெருங்குமிழ்- தழுதாழை - பாதிரி- வாகை-இவற்றின் வேர்கள் (டூ-ம்) வகை-க-க்கு (பலம்-ச) ஆக- நிறுத்து நையநருக்கியிதில்(பதக்கு)சலம்விட்டு (உ-படி) ஆகக் காய்ச்சிய கஷாயம்-கூட விட்டுக்கலந்து-இந்துப்பு- வில்வவேர்-தேவதாரம் - சிவப்புக் கொடிவேலிவேர் - திப் பலிமூலம் - திப்பலி-என்னும்-கற்கவகை (சு-ம்) வகை-க-க்கு (பலம்-உ) ஆக-இடித்து வஸ்திரகாயஞ்செய்து அதிலிட்டு சிறுக எரித்துச் சலம்வற்றிக் கடுகுதிரளும் பக்கு வத்தில் - அதிவிடையத்தூள் (வ-பலம்) தூவி-பக்குவத்தில்-கற்கத்தோடு இறக்கிவைத் துக்கொண்டு - இதை, அந்தி - சந்தி-ஒவ்வொரு முட்டைக் கரண்டிவீதம் சாப்பிடுவை யாகில் — கிரகணிரோகமெல்லாம் தீயில் விழுந்து கருகி எரியுஞ் சருகுபோலாம்.— ஆயுள்வேதங் கூறிய சிகிச்சைகளை ஆராய்ந்த பெரியோர்கள் - இந்தச் சுத்தியார நாளத்தைலத்தை உயர்ந்ததைலம் எனச் சொல்வர்- எ-று. (உஉ)

(அசுவகந்திபலாலாக்ஷா தைலம்-கட்டளைக்கலிப்பா.)

அசுவகந்திபலாலாக்ஷாவில்வாமவையொடுசெவ்வியம்படோல்ச டை
யதிபலையிருமல்லிநன்னாரியரிட்டைநெல்லிவரிவரிபர்ப்ப டா
மமிர்தைவங்கம்புன்றேக்கரிக்காந்திநீடம்பின்மூலம்பிசந்துவிதத்த ரு
அரிசனத்துவயஞ்சகச்சிராக்ஷியு*மைந்தெழுத்தடுக்கொவ்வொன்றீரைம்ப ல
மசியமுற்றுமிடித்ததிற்சூர்ப்பநீர்வார்த்தவந்தியதற்கரைசேரி தை
வன்னியிட்டெரிநான்கிலொன்ருக்கிப்பின்வாரரக்கினிரதஞ்சுவச்சமு ம்
வகைவகைக்குக்கடங்கடமுக்கமொஞ்சிருடிமத்தோடுதிரிப லை
மாடமாடகமாகுலிகோலகமட்டணுக்கம்பலினியரோணுக ஞ்
சசிவிலாமிச்சிலவங்கத்தோலடைசாதிசந்துடியஷ்டிமந்திட்டிந ற்
சாரிபையகிற்கீரகாகோளியுஞ்சாதிமான்மதங்குங்குமம்பங்கு ஙா
தந்திகற்ணிமகாகோளியச்சடைதாளிசந்தகாம்மிருசீரக ஞ்
சாற்றும்பாதிரிக்கூட்டஞ்சுரோஸ்வரிசக்கிராங்கி*யுமைகோணத்தெண்ணி றை
பிசகிடாமல்வகைக்கொருமுட்டியாய்ப்பெய்தநீரிழையிட்டடிறுத்துநெ ற்
பேணிவைத்தொருதிங்கடணந்தெடுபிற்றைமுற்கருமந்தொலைத்தாடயி ழ்
பேதசூதிகைவாயுவுஞ்சந்நியாம்பீடைவாதபித்தாமயஞ்சிரண ப்
பேர்கொள்வெப்பமுதலியநோய்களும்பேருயிர்க்கெதிர்பீளையலர ரோ.

இ - ள், அமுக்கிராங்கிழங்கு - சிற்ருமுட்டிவேர்- கொம்பரக்கு-செவ்வியம்-பேய்ப்புடல் - சடாமாஞ்சில் - பேராமுட்டிவேர் - சிற்ருமல்லி- பேராமல்லி-நன்னாரி- கடகரோகணி - நெல்லிவேர் - தண்ணீர் விட்டான்கிழங்கு - பர்ப்பாடம்-சீந்தில்-சிறுகத்தரிவேர் - சிறுதேக்கு - விஷ்ணுகாந்தி - திப்பலிமூலம் - தாமரைவளையம் - தேவதாரம் சரளதேவதாரம் - மஞ்சள் - கஸ்தூரிமஞ்சள் - சகச்சிராக்ஷி-என்னும் (உரு-ம்) வகை-க-க்கு (பலம்-ம) ஆக - நிறுத்துப்பொடியாக நறுக்கி-நைய இடித்துக்குடிநீர்ப்பாண்டத்திலிட்டு ஆற்றுச்சலம் (த-யும்) காடிச்சலம் (பதக்கும்) விட்டு அடுப்பேற்றி - சிறியதீயினல் எரித்து (அ - ல் - க) ஆக - வடித்து அக்கஷாயத்தில் - கொம்பரக்கு கஷாயம் (பதக்கும்) நல்லெண்ணெய் (பதக்கும்) விட்டு-சுக்கு-மிளகு - திப்பலி-சடாமாஞ்சில் - மாதுளைக்கனியின்மேற்ருேல் - கடுக்காய் - நெல்லிக்காய்-தான்றிக்காய் - உழுந்து - சிறுநாகப்பூ - சிற்றரத்தை-தக்கோலப்பொட்டு - சந்தனக்கட்டை-நாணற்ருது-காட்டுமிளகு - பச்சைக்கருப்பூரம் - விலாமிச்சு - லவங்கப்பட்டை - லவங்கப்பத்திரி-சாதிக்காய் - ஏலம் - அதிமதுரம் - மஞ்சிட்டிவேர்-சிறுநன்னாரி- அகிற்கட்டை- க்ஷீரகாகோளி - கஸ்தூரி - குங்குமப்பூ-அதிவிடையம் - மெருகன்கிழங்கு - மகாகோளி - கீழ்வாய்நெல்லிவேர் - தாளிசபத்திரி - கிரந்திதகரம் - சீரகம்-கருஞ்சீரகம் - பாதிரிவேர்-வில்வவேர் - பெருங்குமிழம்வேர் - தழுதாழைவேர்- வாகைவேர்-முசுமுசுக்கைவேர்-கடகரோகணி-என்னும் (சங) கற்கதிரவியங்களையும்-வகை-க-க்கு (பலம்-க) ஆக-அக்கஷாயத்திஞல் அரைத்துக்கரைத்து விதிபோல் எரித்துத் துழாவிப் பக்குவத்தில் வடித்து நெற்புடத்தில் ஒருமாதம்வரையில் வைத்தெடுத்துக் கருமசாந்திமுதலிய

தானங்களுஞ்செய்து - இத் தைலத்தை, முறைப்படி ஸ்நானம் செய்யில் பலவித மாகிய - சூதிகாவாதரோகம் - சந்நிபாதங்கள் - வாத பித்த கப ரோகமும் - சீரணசுரம் - முதலியரோகங்களும்-பெருங்காற்றில் அகப்பட்டபீளைப்பூப்போலாம்-எ-று. (உரு)

* குடிநீர்ச்சரக்கு (உடு) என்றும் - கற்கவகைச்சரக்கு (சரு) என்றும் - தொகை தோன்ற - ஐந்தெழுத்தடுக்கென்றும் - உமைகோணமென்றும் - கூறினமையால் - ஐந் தெழுத்தடுக்கென்பது சிவசக்கரத்துள் - பஞ்சாக்ஷரமாறலில் ஓர்வகை (உடு) எழுத் துக்களெனவும்-உமைகோணமென்பது - சத்திசக்கரத்துள் (சரு) முக்கோணங்களெ னவும்-பொருளமைத்துக்கொள்க.

(சிறிய அசுவகந்தி பலாலாக்ஷா தைலம்-வி-ம்.)

வராககற்ஞரிபலையரக்கோர்வகைக்கீரைம்பலமா ம்
வனங்கடங்குவாதந்துவம்படிமஸ்த்தெண்ணெ ய்
யொராறுமூவரைமுதன்மூன்றேடுகுரும்பையரத் தை
யுசிரமட்டிதிட்டிகுப்பையொலிநிசிசந்தா தி
யிரேணுகைகச்சந்தருசாய்நாரியிவைபதினெ ட்
டிஃதிஃதோகாசிடைமூன்றிழையமுதிட்டெரித் தா
டராவினஞ்சிகாவளமுன்னுங்கதிவெப்பினஞ் சீ
றசுவகந்திபலாலாட்சையடலுரைப்பாரியா ரே.

இ-ள், அமுக்கிராங்கிழங்கும் - சிற்றாமுட்டிவேரும் - கொம்பரக்கும் - வகை - க க்கு (பலம் ரு) ஆக-நிறுத்து ஆற்றுச்சலம் (பதக்கு) விட்டு-எரித்து (உ-படி) கஷாயம் ஆக-வடித்ததில்-தயிர்ச்சலம் (படி-கூ-ம்) நல்லெண்ணெய் (படி-க௨-யும்) கூடச்சேர் த்து - அசுவகந்திக்கிழங்கு - குறுந்தொட்டிவேர் - கொம்பரக்கு - பெருங்குரும்பை - அரத்தை -விலாமிச்சு - அதிமதுரம் - மஞ்சிட்டி - சதபுட்பி - கோஷ்டம் -கப்புமஞ்சள்- சந்தனக்கட்டை-திப்பலிமூலம் - காட்டுமிளகு - கடகரோகணி - தேவதாரம்-கோரைக் கிழங்கு-நன்னாரிவேர்-என்னும் (௰அ) கற்கச்சரக்குகளும் - வகை-க-க்கு- காசிடை (ரு) ஆக-நிறுத்துப் பசுவின்பாலால் அரைத்து அதிற்கரைத்துத் தீபாக்கினியாக எரித்துத் துழாவிப் பக்குவ பாகத்தில் வடித்து வைத்துக்கொண்டு ஸ்நானஞ்செய்யில் சகலசுர ங்களும் மயிலின்முன் சிக்கிக்கொண்ட பாம்பின் கூட்டம்போலாம் - இதுவே, சிறிய அசுவகந்திபலாலாக்ஷாதைலமாம்-எ-று. (உச)

(பலாமடக்குத் தைலம்——பலா-என்பது-சிற்றாமுட்டி.)

பத்திரபதிமூலமொருவீசையிடையுரலிலிடுபஞ்சென விடித்ததினதி ப்
பானீயமெண்ணுன்குபடிபெயத்தொகையிலொருபங்காச்சமைத்தநீ ரை
வத்திரமிட்டுப்பிசைந்துப்பிழிந்தேவடிவடித்தபடியேதிலபவ ம்
வார்த்துமுற்புகன்மூலமொருதொடியையரைசிலையில்வைத்தமுதுகொண்டிழைத்து
மித்திரமுறவேகலக்கப்படிநாறுஞ்சுதைபெய்மிதமுறவவ்விறகிலெரிவெ ண்
மெழுகெனும்பருவம்வடியிதையெண்ணெயாக்கொண்முனம்விண்டபடி யெழுதரஞ்
யுத்திரமிதுகடையில்வருதைலமெடுகலசமிடிதொருசரக்குத்தைலமென்[செய்
றுன்னிடேலாடுநர்க்குடலெலாம்பூசுநர்க்குண்ணுநர்க்குவமையவ ரே.

இ-ள். சிற்ருமுட்டிவேரை இருப்புரலிலிட்டுப் பஞ்சுபோலிடித்து ஒரு (வீசை) நிறுத்து அதில் ஆற்றுச்சலம் (படி - ௬உ) விட்டு அத்தொகையில் ஓர்பங்கு என்கிற ஒருபடியாகக்காய்ச்சி இறுத்து அந்தத்திப்பியை வத்திரத்திலிட்டுப்பிசைந்து வடித்து அதையும் இத்துடன்சேர்த்து இந்தக்கஷாயத்தின் அடைவே ஒருபடிநல்லெண்ணெய்யும்-ஒருபடி பசும்பாலும்-கூடவிட்டு முற்கூறிய சிற்ருமுட்டிவேரை(பலம்-க) நிறுத்து அம்மியில் வைத்து-ஷை-பாலால் மெழுகுபோலரைத்து அதில் உறவாகும்படி கரைத்து அந்தச்சிற்ருமுட்டிவிறகினுல் எரித்து வெண்மெழுகுப் பக்குவத்தில் வடித்துக்கொண்டு-இத் தைலத்தை, முன்போலவே -கஷாயமும் - பாலும் - கற்கமும் சேர்த்துச்சேர்த்து – ஏழுதரம் மடக்கிக்காச்சி கடைசியில் வராநின்ற தைலத்தைக் கலசத்திலிட்டுவைத்துக்கொள்ளவும் - ஒருசரக்கினுல் செய்யப்பட்ட தைலமென்று எளிதாக நினைக்கவேண்டுவ தில்லை, இதை, அப்பியங்கனஞ்செய்பவருக்கும்- மேலிற் பூசிக்கொள்பவருக்கும் - உண்பவருக்கும் - உவமை அவர்களேயாம். எ-று. (உ௫)

(இதன்மகிமை-வி-ம்)

உவமையிற்பலாமடக்குத்தைலப்பே ரை
யொருதரமுச்சரித்தாலுமுலகத்துள் ளீ
ரவமிருத்தைச்செயுஞ்சூதிகாவாதத் தோ
டதிசுட்கமுழலைகருப்பாசயத்து ற்
பவமருத்துட்சுரங்கைகாலெரிவுள்ளென்பை ப்
பற்றியவெப்பயர்வதிதுற்பலநீரோற்ற ந்
துவமெனச்சொனீர்க்கோவைமுதற்பன்னேயு ந்
தூலமுறுவிருகமுன்சார்த்தூலமா மே.

இ-ள், உவமையில்லாத, இந்தப்பலாமடக்குத் தைலத்தின் பெயரை ஒருதரஞ் சொன்னுலும் - சூதிகாவாதம் - அதிசுட்கரோகம் - உழலைரோகம் - கருப்பாசயவாதம் உட்சுரம்-கை கால்எரிவு - அஸ்தியைப்பற்றியசுரம்-அசதி- மிருந்ததுற்பலம் - சலதோஷம் - முன் நீர்க்கோவை - பின் நீர்க்கோவை - முதலிய பலவிதரோதங்களும் - எளிய செந்நாய்க்கு - எதிரிட்ட பெரிய வேங்கையின் கதியையடையும்-எ-று. (உ௬)

(வேறுவகை சிற்ருமுட்டித் தைலம்-சந்த-வி ம்.)

சிற்ருமுட்டியையொருதுலையிடிவிரிதிரைவருபுனலிருகடமதிலிடுவ ன
விற்ருனட்டிறுசிவமொருகடமமுதெளிரதமரையடியொருபதுதொடிய ணு
வுற்ருமட்டிமையிடடெடிஃதுபலையுறுதைலமுணுகர்முழுகுயர்கருவ றை
யிற்ருனெட்டியவளியொடிருதுவலியிவையரவெதிருறுசிறுநுணலினம ரோ.

இ-ள், சிற்ருமுட்டிவேரை-நன்ருக இடித்து (பலம்-ள) நிறுத்துக் குடிநீர்ப்பாத்திரத்திற்சேர்த்து ஆற்றுச்சலம் (தூணி) விட்டுக்காய்ச்சிக் குருணிக்கஷாய மாகவடித்து - அதில், பசுவின்பால்(பதக்கும்) நல்லெண்ணெய் (ஙு-யும்) விட்டு - ஷை - வேரை (ஙு-பலம்)அணுப்போல்-ஷை-பாலாலரைத்து - அதிற்கரைத்துச்சிறியதீயினுல் எரித்துப் பதத்தில் வடித்துவைத்துக்கொண்டு - முறைப்படி உள்ளுக்குஞ்சாப்பிட்டு - ஸ்நான

முஞ்செய்யில், கருப் பையைப்பற்றிய வாயுவும்,மாதாந்த ருதுகால குன்மமும்.சர்ப்பத் தோடெதிர்ந்த தேரைக்கூட்டம் போலாம். எ-று. (உஎ)

(பிருங்காமலக தைலம்-வி-ம்)

கரிசாலைசிவைகோளிதக்காரிசதமூலைகதலிசடுமுதலிலைபல ங்
கதிகொங்கையடைதுவங்கந்தமிவையிரதமோகடமொவொன் றெண்ணெயும
யிருதூணியமிழ்துருத்ததினெய்தலல்லிசந்திருவேர்வசம்பட்டிசு [தே
ரேஸ்வரிமரைப்பூவளர்க்கமஞ்சிட்டிசாயிருசண்பகம்மாமி சி
தருநாரிவேங்கைவயிரங்கிடிச்செவிபுட்கரஞ்சசிபெருங்குரும் பை
சதகுப்பையிருபதிற்றேமூன்றுவ்வொருசதுர்த்திகைவகைக்கிழைகளா த்
தெரிவடியிதேபிருங்காமலகதைலமூழ்கிடுநசியமூர்த்தரோ யோ
டிருவிழிப்பிணிசெவிடுமுதலியவணங்குமவிழிணருபடுமையினம ரோ.

இ-ள், கையாந்தகரை நெல்லிக்காய்-ஆலம்விழுது - தழுதாழை - தண்ணீர்விட்டான்கிழங்கு-வாழைக்கிழங்கு - என்னும்(சு-ம்)வகை -க - க்கு - சாறு (பதக்கும்) நல்லெண்ணெய்(பதக்கும்) பசுவின்பால் (இருதூணியும்) ஆக - பாத்திரத்தில் விட்டு நெய்தற்கிழங்கு- அல்லிக்கிழங்கு-சந்தனத்தூள்- வெட்டிவேர் - விலாமிச்சுவேர் - வசம்பு- அதிமதுரம் - முசுமுசுக்கைவேர்-தாமரைப்பூவிதழ்-தூதுளைவேர்- மஞ்சிட்டிவேர் கோரைக்கிழங்கு - சிறுசண்பகப்பூ - பருஞ்சண்பகப்பூ - சடாமாஞ்சில் - தேவதாரு-நன்னாரிவேர் - வேங்கைவயிரம் - அமுக்கிராங்கிழங்கு - கோஷ்டம் - கருப்பூரம்-பெருங்குரும்பை - சதபுட்பி-என்னும் (உங) சரக்கும்-வகை- க - க்கு (பலம்-வ) இதுகளை ஷை - பால் விட்டரைத்துக் கரைத்துக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்துக்கொண்டு-ஸ்நானஞ்செய்தாலும் - நசியம்பண்ணினாலும் - சிரோரோகம் - நேத்திரரோகம்-செவிடு - முதலியரோகங்களும் - புட்பித்த மூங்கில் குலம்போலாம். (உஅ)

(சிறிய பிருங்காமலக தைலம்-வி-ம்.)

கரியகரிப்பானமிர்தைகாணியிம்மூன்றிற்கசியிரதமூப்படியெண்ணெய்யமுதொன்றிரண்டா, மரிசனத்துவயமரத்தைகோரைநெய்தனாரியாரமசைகடுகைதிட்டிசலஞ்சாதுர்சாதந், தருகுருப்பையம்பிருதொண்டொவொருநிட்கமரைக்குந்ததிமதுரந்தொடியிடைகளைத்தடுெத்திறுத்தா, டிருதலைநோய்பயித்தியங்கண்ணோய்களழற்புழுவாமிலகுபிருங்காமலகதைலமென்பதிஃ தே.

இ - ள், கறுப்புக்கையாந்தகரை-நெல்லிக்காய்-பொன்னாங்காணி-இம்-ங-சாறும்-வகை-க-க்கு (படி-க) எண்ணெய் (படி-க) பால் (படி-உ) இவைகளைத் தைலப்பாத்திரத்தில் விட்டு - கப்புமஞ்சள் - மரமஞ்சள்-அரத்தை-கோரைக்கிழங்கு - நெய்தற்கிழங்கு - நன்னாரிவேர் - சந்தனம் - சீரகம்-கடகரோகணி-மஞ்சிட்டிவேர்-விலாமிச்சுவேர் * (சாதுர்சாதம்) தேவதாரி- பெருங்குரும்பை-திப்பலி-என்னும் கற்கவகை (யஅ - ம்) வகை-க-க்கு (வராகனிடை-க)ஆக-நிறுத்து-ஷை-பால் விட்டரைத்து வழிக்கும்பக்குவத்தில்-அதிமதுரம் (பலம்-க) கூட வைத்தரைத்து வழித்து அதிற்கரைத்து எரித்துப் பக்

குவபாகத்தில் வடித்து வைத்துக்கொண்டு - ஸ்நானஞ்செய்யில், ஏழூநாயிறும்-பயித்தியமும்-கண்ணேயும்-நெருப்பில் விழுந்த-புழுவைப்போலாம். எ-று. (உகூ)

* சாதுர்சாதம் - ஆவன - ஏலம் - லவங்கப்பட்டை - லவங்கபத்திரி- சிறுநாகப்பூ என்னும் - இந் (ச) சரக்குகளாம்.—இனி இது போல்வரும் - தொகைச் சரக்குகளுக்கெல்லாம்-இவ்வண்ணமே-பொருளமைத்துக்கொள்க.

(வேறுவகை-சிறியபிருங்காமலகதைலம்.)

கோகனமாமலகியின்சாறெள்ளினறுநேய ங்
குருணியொவ்வொன்றமிழ்துபதக்குபயபலேமது ர
நாகபலேமுந்திரிகைகுப்பையொலிசந் தி
ராத்திரிகச்சோரமிச்சையுருளரிசிழுசுக் கை
யாகுலிநற்*றிரிசாதமொருபானேடே மூா
மஂஂதஂஂதங்கரீறுநிட்கமரைத்திடட்டிக்குளிபொ ற்
றேகமுறும்பித்தக்லுங்கண்ணெளிருஞ்சிரநோ ய்
தீருமிதேசிறியபிருங்காமலகஞ்செய் யே.

இ - ன், கையாந்தகரைச்சாறு- நெல்லிக்காய்ச்சாறு—நல்லெண்ணெய் (இம்-கூ-ம்) வகை - க - க்கு (ஙு - யும்) பசுவின்பால் (பதக்கும்) ஒரு பாண்டத்திலிட்டு - சிற்றுமுட்டிவேர் - பேராமுட்டிவேர் - அதிமதுரம்-நாகமல்லிவேர் - திராட்சை- சதகுப்பை-கோஷ்டம்-சந்தனக்கட்டை-மஞ்சள் -பூலாங்கிழங்கு-விலாமிச்சு-கொத்துமல்லிவிதை-முசுமுசுக்கைவேர்-சிற்றரத்தை - லவங்கப்பட்டை -லவங்கப்பத்திரி-ஏலம் - என்னும் கற்கவகை (ஙஎ-ம்) வகை-க-க்கு (வராகனிடை-கூ) இவைகளைப் பால்விட்டரைத்துக் கரைத்து மெல்லிய தீயால் எரித்துப் பருவமறிந்து வடித்து வைத்துக்கொண்டு-விதிபோல (ச) நாட்கொருகால் - ஸ்நானஞ்செய்யில் - தேகத்தில் - ஒளியுண்டாம் - பித்தநோய்விலகும்-நேத்திரந்துலங்கும்-சிரோரோகம்நீங்கும். எ-று. (கூ0)

(பிருங்கராஜ தைலம்-வெ-பா.)

தேகரா சச்சுரதந் தில்லயநேர் நேர்கூட்டிப்
பாகமுறக் காய்ச்சிப் பருகுவார் - காகமுணுங்
காசத்தைக் காணுரக் காசமுற்று ரிப்பிருங்க
ராசத்தைக் காணார் கவில்.

இ-ன்,கரிசாலேச்சாறு (படி-ஏ) நல்லெண்ணெய் (படி-ஏ) இவ்(உ-ம்) தைலப்பாத்திரத்தில் விட்டுத் தீபாக்கினியால் எரித்துப் பக்குவமாக வடித்து வைத்துக்கொண்டு-அந்தி - சந்தி(ஒரு - துட்டிடை - துட்டிடை-சாப்பிடுகின்றவர்கள்) காசரோகத்தைக் காணுதவர்களா யிருப்பார்கள் - காசரோகத்தினுல் வருத்தப் படுகிறவர்களெல்லாம் - இந்தப் பிருங்க ராஜமென்னும் - தைலத்தைக் காணுதவர்களென்றே சொல்லக் கடவை. எ-று.—காகம் உண்ணுங்காசம் - என்பது - காகங்கள் உண்ணும்படிக்குக் கோழையை வெளிப்படுத்தாநின்ற-இருமல் வியாதியாம். (கூக)

(மெருகு சமூலத்தைலம்-வி-ம்.)

தீர்க்ககந்தைநூறுபலமிதற்கட்டத்தொன்றென்றுசிற்றுமுட்டி
தேவகந்தமூன்றுமிடித்தாரநாளம்பதக்கிற்செலுத்தெட்டொன்று
நீர்க்கவடியிதற்கிரட்டியெண்ணெய்யமுதூற்றுமரநிசிநன்றி
நெய்யாரங்கடகரோகணியிருளிச்செவிமுருகுநிறைந்ததாரு
தீர்க்கமதுரிக்குமஷ்டிமதுகமருட்கிழங்குமஞ்சிட்டிமூல
செய்யவரக்கிவைபத்தும்வகைவகைக்குக்கஃசாகச்சேர்த்திடித்துப்
பார்க்கவருந்துகளாக்கியதிலிட்டுச்சிறுகவட்டிப்பதத்திறுத்துப்
பருகவளித்தங்கமெலாந்துவாலையிடுசீதசுரம்பறக்குந்தானே.

இ-ள், (ஈ-பலம்) மெருகின்செடிசமூலம்-இத்தொகைக்கு-எட்டில்-ஒன்று-என்கிற (டஉ௨-பலம்)சிற்றாமுட்டிவேர் - மற்றொரு-ஒன்று-என்கிற (டஉ௨-பலம்) நெய்ச்சட்டிப் பூண்டு-என்னும்-இம்மூன்றையும் நன்றாகஇடித்து(பதக்கு)காடித்தண்ணீர்விட்டுக் காய்ச்சி (அ-ல்) ஒருபங்காக வடித்த கஷாயத்தில் (உ-படி) நல்லெண்ணெய்யும் (உ-படி) பசும்பாலும் சேர்த்து - மரமஞ்சள் - நன்னாரிவேர் - தைலப்பசையுள்ள சந்தனக் கட்டை - கடகரோகணி - அமுக்கிராங்கிழங்கு - வாசனை நிறைந்த தேவதாரிக் கட்டை - அதிமதுரம் - மருள்கிழங்கு - மஞ்சிட்டிவேர் - செம்மை நிறமுள்ள கொம் பரக்கு - என்னும் - கற்கவகை (ம-ம்)வகை-க-க்கு(பலம்-வ) ஆக-மெல்லியதூள்செய்து அதிலிட்டு மிருதுவாக எரித்துப் பதத்தில் வடித்து வைத்துக்கொண்டு இதை, உள் ளுக்கு - ஒருதுட்டிடை - துட்டிடை-அந்திசந்தி சாப்பிடச்செய்துமேலுக்குந்துவாலை யிட்டு மெதுவுறப்பிடிப்பித்தால், சீதசுரம்-விலகிப்போம்-எ.று. (கூ௨)

(கதகாதித் தைலம்-கதகம்-என்பது-தேற்றான் கொட்டை.)

இல்லமுறுமண்டங்கணூறுபலந்துகளா
யிடித்ததனிற்றாணிநீரிட்டதையெட்டொன்று
யெரித்திறுத்துத்திலபவத்தையிதற்கீடாப்பெய்கா
ழிருமஞ்சடிரிபலைமூன்பியம்பண்டமனுக்கம்
வில்லுவநற்கனித்தசைலோத்திரங்காய்ச்சுக்கட்டி
விளங்கனியன்றசையாச்சாதனபலமென்பருப்பு
வெண்குன்றிப்பருப்போமைக்கொட்டைவரும்பருப்பு
விரைத்தகரமரம்பைப்பூவெற்பிரதங்காக்குக்
கல்லுடைக்கல்மாயாளியிவை*மறவன்றொகையாங்
காண்வகைக்குநிட்கமொன்றாய்க்கல்லுரலிற்பொடித்துக்
கலுவத்தில்வெள்வேற்றேற்குடிநீராலரைத்துக்
கரைத்தெல்லாமொருங்குறவேகலக்கியடுப்பேற்றி
மெல்லவெரித்திறுவிஃதேகதகாதித்தைலம்
விரிகிக்குட்*கோட்டிவசம்விட்டெடுத்திங்கதனை

மேன்முழுதுந்தடவினுமப்பியங்கனஞ்செய்திடி னு
மேகநோய்பெருங்காற்றின்மேவசலென்றுண ரே.

இ-ள், தேற்றான்கொட்டையை நன்றாகப்பொடிசெய்து (பலம்-ஈ) நிறுத்துக்குடி நீர்ப்பாண்டத்தில் சேர்த்து ஆற்றுச்சலம் (த) விட்டுச் சிறிய தீயாக எரித்து (அ-ல்) ஒருபங்காக வடித்த கஷாயத்தில் நல்லெண்ணெய் (படி-க) விட்டு தேறின மரமஞ் சள்-கப்புமஞ்சள் - கடுக்காய் - நெல்லிக்காய் - தான்றிக்காய் - தேற்றாங்கொட்டைத் தூள் - சந்தனக்கட்டை - வில்வப்பழத் தசை - வெள்ளிலோத்திரம் - காச்சுக்கட்டி- விளாம்பழத் தசை - பருத்திக்கொட்டைப்பருப்பு - வெண்குன்றிப்பருப்பு - மாங் கொட்டைப்பருப்பு - கிரந்திதகரம் - வாழைப்பூ - கற்பூரச்சிலாசத்து - காந்தக்கல் காவிக்கல் -வட்டத்திருப்பி-என்னும்-கற்கவகை (உ0-ம்)வகை-க-க்கு(வராகனிடை-க) ஆக நிறுத்து இவற்றுள் - கல்லுரலில் முதலிற்பொடிக்கத்தக்கவைகளைப் பொடித்துப் பின்பு - மற்றசரக்குகளையுங் கொட்டிக்குமுறவிடித்துக் குழியம்மியிலிட்டு- வெள் வேலம்பட்டைக்கஷாயத்தினால் மைபோலரைத்து - ஷை - கஷாயத்தில் கரைத்து அடுப்பிலேற்றி மெதுவாக எரித்துப் பருவமறிந்து வடித்துச் சீலைமண்செய்து நெற் புடத்தில்(கூ)நாள் வைத்தெடுத்துக்கொண்டு இக் கதகாதித் தைலத்தை, அந்திசந்தி ஒவ்வொரு காசிடை உள்ளுக்குக்கொண்டாலும் - மேலெங்கும் பூசித் துவாலையிட் டுப்பிடிப்பித்தாலும் - நாலுநாட் கொரு கால் அப்பியங்கனஞ் செய்தாலும் - மேக அழலை-மேகவெட்டை - மேகநீர்- முதலிய பற்பல மேகசம்பந்தமான ரோகங்களும் பெருங்காற்றிலகப்பட்ட கொசுக்களைப்போலாம்,எ - று. (கூரு)

* மறவன் - என்பது - சிலேஷ்மம் - இச் சிலேஷ்மத்தின் தொகை (உ0) ஆத லின் (உ0) என்னும் தொகைக்கு - மறவன் தொகை என்றும், *ஒன்பது - நாள் என்பதற்கு - கோள்திவசம் - என்றும்-கூறினர்.—கோள்-நவக்கிரகம்- திவசம் - நாள்.

(சிறுகுமரித் தைலம்.)

குமரியைக்கைக்கொண்டமோகையறியாவமுதுகொப்பளித்திடவாங்கியோ ர்
குருணியோடெண்ணெயும்பாலுமொவ்வொருபடிபெய்குட்டமந்திட்டியா ர
மயிர்தைமுக்கடுசாதிதிரிபலைசுசாதிபலமஷ்டிமதுகம்பைசா சி
யபயலைதரிக்கும்வேர்சாதுர்சாதந்தகரமரியுண்மூலஞ்சாரி பை
யிமவாலுகைநெய்தல்கச்சோலமிலதையிவையிருபானோடேழுமும்மூ ன்
றெனுநிட்கநிறையமுதிலிழையட்டிவடிகொளினியென்சொல்கேன்சிறு குமரி
யமரபட்சஞ்சாலிவைத்தெடுத்தாடுவிழியருகலொடுநீர்க்கம்மனு [யை
மமரமுங்கண்ணோயுமேகவழறலைநோயுமாமையஞ்சிறகாம ரோ.

இ-ள், கற்றாழைச்சோற்றை எடுத்துக்கடுக்காய்த்தூள் சேர்க்காமல் - சலம் கக்கும் படி நன்றாகப்பிசைந்து பிழிந்துவாங்கிய சலம்(க-யும்) நல்லெண்ணெய் (படி-க-ம்) பசுவின்பால் (படி-க-ம்) ஒருபாத்திரத்தில் விட்டு - கோஷ்டம் - மஞ்சிட்டிவேர் - சந் தனம் - ரசாஞ்சனம் - சுக்கு - மிளகு - திப்பலி - புழுகுச்சட்டம் - கடுக்காய்-நெல்லிக் காய் - தான்றிக்காய் - சாதிக்காய் - அதிமதுரம் - சடாமாஞ்சில் - விலாமிச்சம்வேர்

வெட்டிவேர் - சாதுர்சாதம்-கிரந்திதகரம் - கோரைக்கிழங்கு - நன்னாரிவேர் - பச்சைக் கருப்பூரம் - செங்கழுநீர்க்கிழங்கு - பூலாங்கிழங்கு - தக்கோலப்பொட்டு - என்னும்-கற்கதிரவியம் (உஎ-ம்) வகை-க-க்கு (வராகனிடை-௩) ஆக-நிறுத்தவைகளைப் பசும்பால் விட்டுஅரைத்துக்கரைத்துக் காய்ச்சிப்பதத்தில் வடித்து (ரு-நாள்) நெற்புடத்தில்வைத்து எடுத்துக்கொண்டு முறைபோல் - ஸ்நானஞ்செய்வையாகில் - கண்ணருகல் - நீர்க்கம்மல் - அமரம்-கண்ணேவு - மேகவழல்-தலைநோய் - முதலிய நோய்களெல்லாம் ஆமையின் சிறகுபோல் இல்லையாய்விடும்-எ-று. (௩ச)

(பெருங்குமரித் தைலம்.)

கன்னியாகுமரியமிர்தஞ்சுவச்சம்மொவொருகடமுயருநூட்சோதக ங்
கையான்சிவைச்சுரசமஃதஃதுபடிபடிபெய்கண்டுபொரங்கியிருவே ர்
நன்னாரியுபயமிருசந்தமிருதாருதிரிராத்திரியரத்தைமுள ரி
நாளமந்திட்டிமதுரங்குவளைதக்கோலநாதேயமுஸ்தைபூர ம்
வன்னியுறுகத்தூரிமுப்பலைக்குலக்காய்மணச்சாலிவிடைகிச்சி லி
மாதுலங்கத்தோடுசாதுர்சாதம்பூகமடன்முப்பதிற்றைந்தெலாங் (யில்வங்
கொன்னறும்பாலாட்டுமுக்கஃசொவ்வொன்றுவிதிகொண்டுவடியாடி மை
கூழாட்டமக்கிநோயிவைபெரியகுமரியாங்கொள்ளிமுன்பல்லமா மே.

இ-ள், இளமைத்தன்மையுள்ள கற்றாழைமடற்சாறும்-பசுவின்பாலும் -நல்லெண்ணெய்யும்-வகை-க-க்கு (பதக்கு-ம்) மொந்தன்வாழைக்கிழங்குச்சாறும் - கரிப்பான்சாறும்-நெல்லிக்கனிச்சாறும்-வகை-க-க்கு (படி-க-ம்) ஆக-ஒருபாண்டத்திலூற்றி-சிறுதேக்கு-வெட்டிவேர் - விலாமிச்சம்வேர்-சிறுநன்னாரி - பெருநன்னாரி-சந்தனம்-செஞ்சந்தனம்-தேவதாரி-சரள தேவதாரி - கறிமஞ்சள் - மரமஞ்சள் - கஸ்தூரிமஞ்சள்-அரத்தை-தாமரைவளையம் - மஞ்சிட்டிவேர்-அதிமதுரம்-நீலோற்பலக்கிழங்கு-தக்கோலம்-நீலாஞ்சனம்-கோரைக்கிழங்கு - கருப்பூரம் - கஸ்தூரி-கடுக்காய்- நெல்லிக்காய்-தான்றிக்காய்-சாதிக்காய் - புழுகுசட்டம் - அதிவிடையம்-கிச்சிலிக்கிழங்கு - மாதுளம்பழத்தின்மேற்றோடு-சாதுர்சாதம் - பாக்குமரத்தினதுபூமொட்டு- என்னும்-கற்கதிரவியம் (௩ரு-ம்) வகை க-க்கு (பலம்-ஜ) ஆக-பசும்பாலால் அரைத்துக்கரைத்து எரித்துப்பக்குவத்தில் முறைமைப்படி வடித்து நெற்புடந்தீர்த்து வைத்துக்கொண்டு (ச) நாட்கொரு கால்-ஸ்நானஞ்செய்வித்தால், இமைநரம்பில் பரவிய- வாதச்சலிப்பும்- கண்ணேய்முதலிய சிற்சில ரோகங்களும்- எரிகின்ற கொள்ளியின் முன் நேர்ந்த கரடியைப்போலாம்-எ-று. (௩ரு)

(அமிர்தக்குமரித் தைலம்.)

மதுபன்னிகன்னிசிவையிருமூலநாரிவரிவரிமுகரிமீனூட்சிவி ண்
மதிவல்லிபதுமையிளநீரிரண்டாறும்வகைக்கிரதநான்குபடியெ ண்
ணுதிநெய்பாலத்தொய்தம்வெவ்வேறுசேர்கற்கமுபயவேர்தகரம்வெள் ளி
லோத்திரந்திரிசாதமஷ்டவர்க்கஞ்சந்தமுயர்குங்குமங்கிச்சி லி

## தைலவருக்கச்சுருக்கம்

சிதைபலினியல்லிகருநெய்தல்கர்ப்பூரந்திராட்சைசடைநீலாஞ்சன ஞ்
சிறுகேசராஞ்சுரோசுவரிசாதியடைசொனகுசெப்புமிருபாளுேடுதொ ண்
டதிவிடுவகைக்குமுக்கஃசெடுத்தமுதுகொடலைாத்தொன்றுறக்கலக் கி
யட்டிவடிபட்சமேசுத்திபுரிநாமமமிர்தக்குமரியித்தைல மே.

இ-ள், சீந்தில்கொடி-கற்றுழை - நெல்லிக்கனி - வெட்டிவேர்-விலாமிச்சம்வேர்-நன்னாரி-தண்ணீர்விட்டான் - தாழைவிழுது - பொன்னுங்காணி - கொத்தான்-ஒரிதழ்த் தாமரை - இளநீர் - என்னும்(டுஉ-ன்) ரசங்களும் - வகை-க-க்கு (படி-ச-ம்) நல்லெண் ணெய் (பதக்கு-ம்)தைலப்பாத்திரத்தில் சேர்த்து - வெட்டிவேர்-விலாமிச்சுவேர் -கிரந் திதகரம் - வெள்ளிலோத்திரம் - திரிசாதம் - அஷ்டவர்க்கம் - சந்தனம் - குங்குமப்பூ- கிச்சிலிக்கிழங்கு - நூணற்றுது - அல்லிக்கிழங்கு - நீலோற்பலக்கிழங்கு-கருப்பூரம் - திராக்ஷிப்பழம் - சடாமாஞ்சில் - நீலாஞ்சனம்-சிறுநாகப்பூ - முசுமுசுக்கைவேர்-சாதிப த்திரி-சொனகப்புல்-என்னும்-கற்கதிரவியம்(உகூ-ம்)வகை-க-க்கு(பலம்-ஈ) ஆக-நிறுத்த வைகளைப் பசுவின்பாலால் அரைத்துக் கரைத்துக் கலக்கிச்சிறுகளரித்துப் பருவத்தில் வடித்து (டு) நாள் நெற்புடம் வைத்தெடுப்பாயாகவும்——இதன் பெயர் அமிர் தக் குமரித் தைலமாம் - எ - று. (௩சு)

(இதன்மகிமை.)

இத்திறவெண்ணெய்நாடியினிசியஞ்செய்தாலு ம்
புத்திகொடாடிஞலும்புருவங்கண்சிரநோய்கைகா ன்
முத்தியவெரிவுன்மாதமுதலியநோய்களிச்சா ப்
பத்தியமிடியேறுண்ணும்பணிக்கணவாறுமன் ஞே.

இ-ள், மேன்மையுள்ள இந்தத் தைலத்தை, நாசிக்குள்நசியஞ்செய்தாலு - விதி போல் ஸ்நானஞ்செய்தாலும்-புருவம்-நேத்திரம் - சிரசு-என்னும் -இடங்களைப்பற்றிய நோய்கள் - கை கால் களில் அதிகரித்த எரிவு - உன்மாதம் - முதலிய ரோகங்களும்- இடியுண்டசர்ப்பக்கூட்டக்கதிபோலாம் - இதற்குஇச்சாபத்தியம்-எ-று. (௩எ)

(கஜகற்ணிகா தைலம்)

பருமுசலிமூட்டியைம்பானசுகவந்தியதிபலேகோரைநாராய ணி
பலமுஞன்கொவ்வொன்றினுக்கைந்துமிடிதூணிடத்தசாரத்தட்ட நீ
ரிருபடிநெய்யமுதமஃதஃதரக்கம்பொன்றிருந்ததிப்புனலேம்ப த
மிலவங்கவுரியவிலையிருதாருகேசரமரேணுகமரத்தைதக ர
மரநிசியகிற்சந்துரோகணிவிலாமிச்சைமதுரமுயர்கோரோசன ம்
மந்திட்டிமருண்மூலமொருபாஞேடேழாம்வகைக்கிருவராகனமு தா
லையெலாமதிலிட்டெரித்திறிதுகஜகற்ணியாந்தயிலமாடல்லது ண்
ணகலருஞ்சகலசுரமுங்கடற்காயமாமாமிலமிலறிபத்ய மே.

இ-ள், மெருகன்கிழங்கு- அமுக்கிராங்கிழங்கு - பேராமுட்டி - கோரைக்கிழங்கு தண்ணீர்விட்டான் கிழங்கு -என்னும் (ரு-ல்) முதற்சரக்கு (ருடு-பலமும்) மற்றதுகள்

